REGD. No. M.



# ஆனந்த போதினி

# ANANDA BODHINI.

Vol. 28. பொருளடக்கம். No.
சுபானு ஆனி கஉ

உள்ளடக்கம்









# மதிமோச விளக்கம்

(தூசி. இராஜகோபால பூபதி அவர்கள் இயற்றியது.)

தருமமே தழைத்தோங்கி வளர்ந்துவந்த மகா புண்ணிய பூமியாகிய நம் பரத கண்டத்தில், கலிகாலந் தொடங்கியதிலிருந்து, மனிதர் காலவயப்பட்டு, மன மாறுபட்டுத் தருமத்தில் செலுத்தும் சிந்தையை மிகுதியும் அதர்மத்தில் செலுத்தி வருவதால் அறநெறி குறைந்து மறநெறி வளர்ந்து வருகின்றது. அதற்கேற்ப வஞ்சமும் சூதும், பஞ்சமாபாதகமும், அவற்றிற் கஞ்சா நெஞ்சமும் படைத்த மனிதரே நாள்தோறும், நாடுகள்தோறும், ஊர்தோறும், வீடுகள்தோறும் மலிந்து விநோதம், விநோதமான படுமோசம், மதிமோசம், நிதிமோசங்களையும், சூது வஞ்சனைகளையும் செய்து வருகின்றனர். காலம் செல்லச் செல்ல இதற்குமுன் கண்டும், கேட்டுமிராத எண்ணிறந்த மோசநாசச் செயல்கள் எங்கும், என்றும் நூதனம் நூதனமாகத் தோன்றி அதியற்புதத்துடன் வளர்ந்துகொண்டே வருகின்றன; அவற்றைச் செய்யும் மனிதர்களும் உற்பாத பிண்டங்களாய் ஒருவரை யொருவர் எடுத்து விழுங்குவோராய்: அற்புதமாக உற்பவித்து மலையை விழுங்கிய மகாதேவன்போல வளர்ந்து சிறந்து ஜெகஜாலப் புரட்டர்களாயும், அண்டப் புரட்டராயும், திடீர்ப் புளுகராயும் பரவி வருகின்றனர். இவர்களுடைய மகாமோசச் செயல்களால் சூது வாதறியாத உலகத்தார் அடையும் கஷ்ட நஷ்டங்களுக் களவேயில்லை. வியாபாரத்தொழில் முழுவதிலும் மோசம்; விவசாயத்திலும் மோசம்: உத்தியோகத் துறைகளிலும் ஒப்பில்லா மோசம்; வித்தையிலும் மோசம்; வேடிக்கையிலும் மோசம்; வைத்தியத்திலும் மோசம்; மாந்திரீகத்திலும் மோசம்; சோதிடத்திலும் மோசம்; சோற்றுக்கடையிலும் மோசம்; கப்பலிலும் மோசம்; ரெயிலிலும் மோசம்; நீதிச்சபைகளிலும் மோசம்; தேசச்சேவையிலும் மோசம்; கோயிலிலும் மோசம்; குளத்திலும், வீட்டிலும் மோசம்; காட்டிலும் மோசம்; நாட்டிலும் மோசம்; நகரத்திலும் மோசம். இப்படியே மனிதர் தலைநீட்டு மிடங்களெல்லாம் மோசமாகவே யிருக்கின்றன. இப்படிப்பட்ட மோசங்களிலிருந்து தப்பிப் பிழைப்பதற்கான நீதிமதிகள் இதில் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன,

இதன் விலை ரூபா 1—0—0.

# இரத்தினபுரி இரகசியம்

இதில் மிக்க ஆச்சரியமும், நெஞ்சு திடுக்கிடக்கூடியவையும், ஆதிமுதல் அந்தம் வரையில் மனதைக் கவரக்கூடியவைகளுமான சம்பவங்கள் நிறைந்துள்ளன. அநேக நீதிகளும், புத்திமதிகளும் தக்க திருட்டாந்த பூர்வமாக நிரூபிக்கப்படுகின்றன. நமது சிறுவர், சிறுமிகளும், ஸ்திரீகளும் அவசியமாய் உணரவேண்டிய இலௌகிக ஆசார விஷயங்களைப்பற்றி ஆங்காங்கு விளக்கிக் கூறப்பட்டிருக்கிறது.

| பாகம் | விலை | பாகம் | விலை |
|---|---|---|---|
| 1-ம் பாகம் விலை ரூ. | 1—12—0 | 6-ம் பாகம் விலை ரூ. | 1—10—0 |
| 2-ம் ,, | 2— 4—0 | 7-ம் ,, | 2— 4—0 |
| 3-ம் ,, | 2— 0—0 | 8-ம் ,, | 2— 4—0 |
| 4-ம் ,, | 2— 0—0 | 9-ம் ,, | 2— 0—0 |
| 5-ம் ,, | 2— 0—0 | 9 பாகம் கொண்டது | 18— 2—0 |

# அர்ஜுனசிங்கும், சுந்தரும்

இது, ஓர் கவர்ச்சியான நாவல். இதில் இரண்டு துப்பறியும் நாவல்கள் அடங்கி யிருக்கின்றன. இதன் விலை அணா 2.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

# ஆனந்தபோதினி

ஒரு சிறந்த மாதாந்தத்
தமிழ்ச் சஞ்சிகை

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.

(தொகுதி 28.)

சித்திரபானுஸ்ரீ ஆடிமீ முதல் சுபானுஸ்ரீ
ஆனிமீ வரையில்
1942ஸ்ரீ ஜுலைமீ முதல் 1943ஸ்ரீ ஜுன்மீ வரையில்

---

நா. முனிசாமி முதலியார்,
"ஆனந்தபோதினி" ஆபீஸ்.
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.



---

காலிகோ பைண்ட் விலை ரூபா 2—0—0 } 1943 { தபால் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS

From Rao Saheb Late T. Ramakrishna Pillai Avl., B.A., F.M.U., F.R.H.S., Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of "ANANDA BODHINI" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915.*
THOTTAKADU HOUSE.

(Sd.) T. RAMAKRISHNA PILLAI.

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A., I.S.O., Retired Inspector of Schools, and Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of "ANANDA BODHINI." It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.*

(Sd.) A. C. PRANATARTIHARA IYER.

We have received the current number of the Tamil monthly "ANANDA BODHINI," containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate section is set apart for giving advice to women either in the form of abstract statements, or small stories containing moral lessons.—HINDU 22—9—15.

Dear Sir,

Your Tamil monthly entitled "ANANDA BODHINI".......................is written in EASY, CLEAR and READABLE style, WELL-SUITED, PARTICULARLY, to LADIES who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their characters. That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt within the short compass of the monthly are such that they deserve to be READ and RE-READ from the view point to quality in contradistinction from style and rhetoric, with a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number i.e., pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuances of the monthly, since it is being and has to be read by both sexes. ... ... ... ... ... ... It is very much to be envied that there should be over 10,000 subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception. I wish the monthly all success.

TRIVANDRUM,
21—1—17.

A. V. SUBRAMANIA AIYAR,
F.N.S.A. (Lon.), F.C.I. (Birm.)

# ஆனந்தபோதினி

## 28-ம் வருடத்திய விஷய அட்டவணை

| விஷயங்கள் | பக்கங்கள் |
|---|---|

| விஷயங்கள் | பக்கங்கள் |
|---|---|
| அறிஞர் திரு. வி. க. ... | 474 |
| விஞ்ஞானம் விரிதல் ... | 476 |
| கர்ணனும் அர்ஜுனனும் ... | 485 |
| விதியின் போக்கு ... | 489 |
| கார் தங்கி நின்ற கொடி ... | 492 |
| இனியோர் தெய்வம் தொழேன் ... | 495 |
| நரபலி ... | 497 |
| எதிரொலி ... | 500 |
| மணக்கும் மலர் ... | 503 |
| அசிதரின் ஆசிமொழி ... | 518 |
| மக்ளிரைப் பழிப்பது தகுதியா? ... | 520 |
| வயதானவரின் அநுபவம் ... | 524 |
| ரஷ்யாவும் போலந்தும் ... | 526 |
| டேவிட் ஸ்வான் ... | 529 |
| விஞ்ஞானம் அரும்பல் ... | 533 |
| சிற்பி அடைந்த பரிசு ... | 538 |
| கம்பர் கவிகளில் இடைச் செருகலா? ... | 543 |
| பதிலொலி ... | 545 |

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருவள்ளுவர்.



தொகுதி 28 | சுபானுஸு ஆனிமீ கட | பகுதி 12
1943ஸு ஜூன்மீ 15உ

## கடவுள் வணக்கம்.

விரியு(ம்)நீர் ஆலக் கருமையும் சாந்தின்
வெண்மையும் செந்நிறத்(து) ஒளியும்
கிரியு(ம்)நீறு ஆடும் கனலும்ஒத்து ஒளிரும்
கழுத்தில்ஓர் தனிவடங் கட்டி
முரியுமாறு எல்லாம் முரிந்துஅழ கியையாய்
முகத்தலை யகத்துஅமர்ந் தாயைப்
பிரியுமாறு உளதே பேய்களோம் செய்த
பிழைபொறுத்து ஆண்டபே ரொளியே. (1)

என்னைஉன் பாத பங்கயம் பணிவித்து
என்பெலாம் உருகநீ எளிவந்து
உன்னைஎன் பால்வைத்து எங்கும்எஞ் ஞான்றும்
ஒழிவற நிறைந்தஒண் சுடரே!
முன்னைஎன் பாச(ம்) முழுவதும் அகல
முகத்தலை அகத்துஅமர்ந்து எனக்கே
கன்னலும் பாலுந் தேனும்ஆர் அமுதும்
கனியுமாய் இனியையா யினையே. (2)

அம்பரா அனலாய் அனிலமே புவி
அம்புவே இந்துவே இரவி
உம்பரால் ஒன்றும் அறியொணா அணுவாய்
ஒழிவற நிறைந்தஒண் சுடரே!
மொய்ம்பராய் நலஞ்சொல் மூதறிவாளர்
முகத்தலை அகத்துஅமர்ந்து எனக்கே
எம்பிரா னாகி யாண்டநீ மீண்டே
எந்தையுந் தாயும் ஆயினையே. (3)




# பேரறிஞரைப் போற்றுக!

"தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து" என்றார் ஔவையார். செந்தமிழ் நாடுகளிலேயே தொண்டைநாடு எக்காலத்தும் பேரறிஞர்களை—கவிஞர்களை உடைத்தா யிருக்கும் பெருமையை இயற்கையாகக் கொண்டிருக்கிறது. நாம் வாழும் இக்காலத்திலும் அறிஞர்கள் கூட்டத்தை, தொண்டை நாட்டிலேயே அதிகமாகக் காண்கிறோம்.

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு."

என்று திருவள்ளுவர் நாட்டின் சிறப்பை விவரித்திருக்கிறார். ஒரு நாட்டுக்கு எத்தனை விதமான செல்வங்களும் வளங்களும் இருந்தாலும், அறிஞர்கள், கவிஞர்கள் தாம் பெருஞ் செல்வமாகும். ஏனென்றால், அறிஞர்கள் ஆற்றும் அரும் பெருஞ் செயல்களும் அவர்கள் ஆக்கிவைத்துச் செல்லும் அறிவுநூல்களும் கவிகளுமே அழியாச் செல்வங்களாகும். நாட்டுக்கு நிரந்தரமான பெருமையைத் தருவனவாகும். அத்தகைய அறிஞர்களை நாட்டு மக்களாகிய நாம் பொன்னேபோல் போற்ற வேண்டாமா! அறிஞர்களைப் போற்றி வாழ்ந்தால் தான் நாம் பெருமையுடன் வாழ முடியும்.

தொண்டை நன்னாட்டின் பரம்பரைப் பெருமை மங்காதவாறு நிலை நிறுத்தத் தோன்றியவர்களில் திரு. வி. கலியாணசுந்தர முதலியாரவர்கள் குறிப்பிடத்தக்கவ ராவர். நம் காலத்தில் தொண்டை நாட்டுக்குப் பெருமையளித்து வரும் தமிழ்ப் பெரியார்களில் திரு. வி. க. முதன்மையானவர். அவ்வறிஞரால் தமிழ் நாடு முழுவதுமே எத்தனையோ வகையில் பெருமையும் பயனும் பெற்று வந்திருக்கிறது. திரு. வி. க. தம் வாழ்க்கையை—நாட்டுக்கே—மக்கள் சேவைக்கே அர்ப்பணஞ் செய்தவர். அவரது வாழ்க்கைத் தொடக்கமே தன்னலத்துக்காக வன்றிப் பொது நலத்துக்காகவே ஆரம்ப

மாயிற்று. அவர் முதலில் தமிழாசிரியரா யிருந்து மக்க ளுக்கு நல்லறிவு புகட்டினார். தேசசேவையில் ஈடுபட்டு, தமது உணர்ச்சிமிக்க பிரசங்கங்களால் தமிழ்நாடெங்கணும் தேசபக்தி பெருக்கெடுத்து ஓடச் செய்தார். மக்கள் உள்ளத் தில் சுதந்தர வேட்கையைத் தூண்டிவிட்டார். தொழிலாளர் இயக்கத்தில் கலந்து சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றைத் தொழிலாளர்க ளிடையே நிலைநாட்டப் பெரி தும் பாடுபட்டார். 'தேசபக்தன்', 'நவசக்தி' பத்திரிகைகளுக்கு ஆசிரியராய் அமர்ந்து தமது அரிய யோசனைகளைக் கூறி, உரி மைப்போருக்கு மக்களை ஊக்குவித்து வந்தார். சமயத் துறை களில் சேர்ந்து மக்களுக்குக் கடவுள் உணர்ச்சியையும் ஆன்ம நேய ஒருமைப் பாட்டையும் ஊட்டினார். சமரச சன்மார்க் கத்தை நிலைநாட்ட முயன்று வருகிறார். சீர்திருத்த இயக்கங் களில் தலைமை பூண்டு இன்றைய ஜனசமூகத்துக்கு இன்றி யமையாது வேண்டப்படும் சீர்திருத்தங்களைச் செய்து வருகி றார். தமிழ் மொழி, இலக்கிய ஆக்கத்துக்காக இடையறாது செயலாற்றி வருகிறார். இவ்விதம் அவர் ஒல்லும் வகையா லெல்லாம், தாம் பிறந்த நாட்டுக்கும், தம் நாட்டு மக்களுக்கும் இடையறாது சேவையைச் செய்து வருகிறார்.

திரு. வி. க. வின் அரிய சேவையைப் பெறாத ஒரு அர சியல் ஸ்தாபனமோ, சமூக சங்கமோ, சமய சபையோ, இலக் கியக் கழகமோ தமிழ் நாட்டில் கிடையாது என்றால் மிகை யாகாது. அகில இந்திய காங்கிரஸ் மகாசபையின் உய ரிய கொள்கைகளைத் தமிழ் நாட்டில் பரவச் செய்த பெருமை திரு. வி. க. வுக்கே சிறப்பாக உரியதாகும். தமிழ் நாட்டில் தேசீய விதையை விதைத்தவர், திரு. வ. ஊ. சிதம் பரம் பிள்ளை யவர்களானாலும், தேசபக்திப் பயிர் செழித் தோங்கி வளர்வதற்கு ஏற்ற விதமாக நாட்டைப் பண்படுத் திய பெரியார்களில் திரு. வி. க. தலை சிறந்தவராவர். அது போன்றே மகாத்மா காந்தியின் அஹிம்சா முறையையும் சத்தி யாக்கிரக தத்துவத்தையும் தமிழ நாட்டு மக்கள் நன்கு அறி யும்படிச் செய்தவர் திரு. வி. க. அவர்களேயாவர். அக்காலத் தில் அவர் காந்தியடிகளின் அறப்போர் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு காங்கிரஸ் மகாசபை சார்பில் ஆற்றிய அபார சேவையே இன்று பெரும்பயனைத் தந்திருக் கிறது. இன்றுள்ள தமிழ் நாடுத் தலைவர்களின் தேச சேவை யைச் சுலபமாக்கிக் கொடுத்திருக்கிறது என்றால், அதை யாரும் மறுக்க முடியாது.

இவ்விதம், தமது தன்னலமற்ற சேவையால் நாட்டுக்கும் மக்களுக்கும் பேருபகாரம் புரிந்துள்ள இப் பெரியாருக்கு நாம்

நன்றி செலுத்த வேண்டாமா? அவரைப் போற்ற வேண்டாமா? நமது அன்பையும் மதிப்பையும் போற்றுதலையும் வெளிப்படையாகக் காட்டக்கூடிய ஒரு சந்தர்ப்பம் இப்போது வாய்த்திருக்கிறது. திரு. வி. க. வுக்கு வருகிற ஆவணிமாதம் 26-ந் தேதியோடு அறுபதாவது ஆண்டு நிறைவு பெறுகிறது. ஆகவே, அவருக்கு மணிவிழா நாம் கொண்டாட வேண்டும். மணிவிழா என்றால், அறுபதாம் ஆண்டு நிறைவு நாளில் ஒரு கூட்டத்தைக் கூட்டுதலோ, பிரசங்கஞ் செய்தலோ, மலர் வெளியிடுதலோ மட்டும் போதாது. திரு. வி. க. சுமார் நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக ஆற்றியுள்ள அபார சேவையின் சின்னமாக நிரந்தரமான ஒரு ஞாபகச்சின்னம் ஏற்படுத்த வேண்டும். திரு. வி. க. வின் பெயரால் ஒரு பெரிய கழகம் காணல் வேண்டும்; நூல் நிலையங்கள் ஏற்படுத்த வேண்டும். அவரது உயரிய கொள்கைகளைப் பரவச் செய்ய ஆங்காங்கு சங்கங்கள் நிறுவவேண்டும். அவர் நடத்திய 'நவசக்தி' போன்ற சிறந்த பத்திரிகைகளை நடத்தவேண்டும். இவையெல்லாம் செய்வது பிரமாதமல்ல. நம் நாட்டுச் செல்வர்கள் சிலரேனும் முன் வந்தால் போதும். வெகு எளிதில் இவைகளை யெல்லாம் செவ்வனம் நிறைவேற்றி விடலாம். இவ்விதம் ஞாபகச் சின்னங்கள் ஏற்படுத்துவது திரு. வி. க. வைக் கௌரவப் படுத்துவதுமட்டு மல்லாமல், நம்மையும் கௌரவப் படுத்திக்கொள்வதாகும்; நல்லாறு படுத்துவதாகும். அவர் சொல்லிய நல் வழியில் செல்ல நம்மைத் தூண்டுவதாகும். பிற்கால சந்ததிகளுக்கு ஒரு படிப்பினையாகவும் தூண்டுதலாகவும் இருக்கும்.

சென்னைத் தமிழ்ச்சங்கம் திரு. வி. க. வின் மணிவிழாவைச் சிறப்பாகக் கொண்டாடத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்து வருவதாகத் தெரிகிறது. திரு. வி. க. வின் பெயரால் ஒரு நூல் நிலையம் ஏற்படுத்தவும், சில அறிவு நூல்களை வெளியிடவும் பொருள் திரட்டி வருவதாகக் கூறப்படுகிறது. சென்னைத் தொழிலாளர் சங்கத்தார் திரு. வி. க. வின் உருவச் சிலை யொன்றை நிறுவ முயன்று வருகிறார்களாம். மற்றும் பால சுப்பிரமணிய பக்த ஜன சபை, சைவசித்தாந்த மகா சமாஜம் முதலிய சபைகளும் திரு. வி. க. வின் மணிவிழாவை ஏற்ற விதத்தில் கொண்டாட ஏற்பாடு செய்யக் கூடும். சென்னைமா நகரில் மட்டுமல்ல; தமிழ் நாட்டின் பலபாகங்களிலு முள்ள தேசீய சபைகளும், சமூக சங்கங்களும் சமய சபைகளும், இலக்கியக் கழகங்களும் எல்லாம் திரு. வி. க. வின் மணிவிழாவைப் பல வகையாலும் சிறப்பாகக் கொண்டாடக் கடமைப்பட்டவையாகும் என்று நாம் தெரிவித்துக் கொள்ளு

(528-ம் பக்கம் பார்க்க.)

# சந்தா நேயர்களுக்கு முன் அறிக்கை

நமது "ஆனந்தபோதினி" மாதப் பத்திரிகைக்கு இந்த இதழோடு இருபத்தெட்டாம் ஆண்டு பூர்த்தி யடைகிறது. ஆகவே, அடுத்த சுபானுஸூ ஆடிமீ 1-ந்தேதி (16-7-43) 29-வது ஆண்டு பிறக்கப் போகிறது. 'ஆனந்தபோதினி' தன் பருவத்திற்கேற்ற வளர்ச்சி பெற்று கால வர்த்தமானத்துக்கு இயைந்த பற்பல சிறப்பியல்புகளுடன் விளங்கி வருவது வாசக நேயர்கள் அறிந்த தொன்றும். தமிழ் மக்களுக்கு எல்லாத் துறைகளிலும் ஒரு விழிப்பையும் எழுச்சியையும் அறிவையும் உண்டாக்கித் தக்க வழி காட்டுவதே 'ஆனந்தபோதினி'யின் முதற் பெரும் நோக்கமாகும். 29-வது ஆண்டில் இன்னுங் குறிப்பிடத் தக்க விசேஷ அம்சங்களுடன் கூடி விளங்கி 'ஆனந்தபோதினி' உங்களுக்குப் பெரு மகிழ்வை யூட்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறோம். தமிழ் மொழி, சமூகம், சமயம் ஆகியவைகளின் மறுமலர்ச்சிக்கான வகையில் பல கட்டுரைகளையும் சிறு கதைகளையும் தமிழ்நாட்டுப் பேரறிஞர்கள் பலர் 'ஆனந்த போதினி'யில் எழுதி வருவார்களென்று அறிவிக்க விரும்புகிறோம்.

நாம் இறைவன் திருவருள் ஒன்றையே நம்பி, தமிழ் மக்களுக்கு நம்மாலான சேவையைச் செய்ய வேண்டுமென்ற ஒரு பெரும் நோக்குடனேயே, குறைந்த சந்தா விகிதம் ஏற்படுத்தி நிறைந்த விஷயங்களைக் கொடுத்து ஒழுங்காக இந்த இருபத்தெட்டு வருஷ காலமாக நடத்தி வருகிறோம். ஆனால், இப்போது நடைபெற்று வரும் மகாயுத்தங் காரணமாக, பத்திரிகைக் காகிதங்கள் சவரன் விலையைப் போல் அக விலையாய் விட்டிருக்கிறது. அத்துடன், காகிதத்துக்குப் பஞ்சமும் ஏற்பட்டிருக்கிறது. இதன் பயனாக, பத்திரிகை உலகுக்கு மிகவும் கஷ்ட நஷ்ட மேற்பட்டிருக்கிறது. அத்துடன், சர்க்காரும் இன்ன அளவுள்ள பத்திரிகை இத்தனை பக்கங்கள் கொண்டது இவ்வளவு விலைக்கு விற்க வேண்டுமென்று ஒரு புது உத்திரவு மூலம் நிர்ணயித் திருக்கின்றனர். இன்னோ ரன்ன காரணங்களால், "ஆனந்தபோதினி" சந்தாத் தொகையை இவ் வாண்டிலிருந்து இரண்டு ரூபாயாக உயர்த்தி யிருக்கிறோம். ஆதலால், "ஆனந்தபோதினி"யின் பால் அன்புபூண்டு ஆதரித்து வரும் வாசக நேயர்கள் அனைவரும் 29-வது ஆண்டின் சந்தாத் தொகையை (சென்ற இதழில் குறித்துள்ளபடி ஆனி மாத இதழுக்கு நாலணா ஸ்டாம்பு அனுப்பாதவர்கள்) சந்தா விகிதம் ரூபாய் இரண்டுடன் நாலணாவுஞ் சேர்த்து நாளது சுபானு வருஷம் ஆனிமீ 28-ந்தேதி (12-7-43)-க்குள் மணியார்டர் மூலமாகவோ நேரிலோ எங்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டுகிறோம். சந்தாத் தொகையின் பொருட்டு வி. பி. அனுப்புவதால் தபால் செலவு 4 அணா மணியார்டர் கமிஷன் இரண்டணா ஆக ஆறு அணா அதிகமான ஜாஸ்தியான செலவும் சஞ்சிகை வந்து சேர வீண் கால தாமதமும் ஆகும். ஆகையால் எல்லா நேயர்களும் மேற் குறிப்பிட்ட தேதிக்குள் மணியார்டர் செய்து விடுவதுதான் உங்

# அசிதரின் ஆசிமொழி

(வித்வான் சு. உமைதாணு பிள்ளை)

சுத்தோதனன் தன் ஞான மைந்தன் சித்தார்த்தனை உலக மாயையிற் சிக்க வைப்பதற்காகப் பல சூழ்ச்சிகளைச் செய்தான். ஓர் நாள் மலைவளங் காணச் சென்றார்கள். மலைச் சாரலின் ஓர்பால் சித்தார்த்தன் விளையாடிக் கொண்டிருப்பதை அவ்வழியே வந்த அசிதமுனிவர் கண்டார். சித்தார்த்தனது திருமுகப் பொலிவு முனிவர் சிந்தையைக் கவர்ந்தது. மெய்மறந்த முனிவரது கைத்தண்டம் கீழே விழுந்தது. சித்தார்த்தன் அதை எடுத்து முனிவரிடம் கொடுத்தான். சித்தார்த்தனுடைய திருமுகப் பொலிவையும் ஏனைய அங்க லக்ஷணங்களையும் கண்டு வியந்து சித்தார்த்தனை அறிந்து கொண்ட முனிவர் சுத்தோதனனிடம் மைந்தனை ஆசீர்வதித்து வியந்து கூறினார்.

மன்னுயான் ஓர் துறவி வனமதிலே வாழ்வோன்
மக்களெனை அசிதரென்றே வழங்கிடுவர் நாளும்
என்னையாளு மிறையருளால் இவ்வழியே வந்தேன்
எழில்வழியும் பொழிலிதுபோல் எவ்விடமு மில்லை. 1

நிழலின்கீழ் துணைவருடன் நின்சேயுங் கூடி
நீங்காமல் விளையாடி நிலமதிலே நின்றான்
அழகொழுகும் திருமுகத்தின் அருட்பொலிவைக் கண்டு
ஆனந்தக் கடல்மூழ்க அகிலமெல்லாம் மறந்தேன். 2

கணம்பிரியா தென்தண்டம் கைநழுவி வீழ
கண்டவுன்சேய் எடுத்துவந்தே கரமதிலே சேர்த்தான்
மணலிலவன் அடிச்சுவடை மனங்குளிரக் கண்டேன்
வனப்புதரு மிவ்வடிபோல் வையகத்தி லில்லை. 3

---

கட்கும் எங்கட்கும் லாபமும் சௌகரியமும் ஆகும். வி. பி அனுப்புவதால் இன்னொரு சங்கடமும் உண்டு. அதாவது வி. பி. வந்தால் ஏழு நாளைக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். அதற்குமேல் இருக்கவேண்டும் என்று விரும்புகின்றவர்கள் நாள் 1-க்கு 2 அணு வீதம் ஸ்டாம்பு வாங்கி ஒட்டி விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். அதுவும் 10 நாட்களுக்குமேல் தபாலாபீஸில் வைத்திருக்க மாட்டார்கள். இந்தச் சங்கடங்களை யெல்லாம் நோக்கும்போது அன்பர்கள் எல்லாரும் சந்தாத் தொகையை முன் பணமாக அனுப்பி ஆதரிப்பதே நலம்.

குறிப்பு:—முன் பணம் அனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால் மணியார்டர் கூபனில் தங்களுடைய சந்தா நம்பரைக் குறிப்பிட்டு "29-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுத வேண்டும். புதிய சந்தாதாரர்கள் 'புதிய ஆண்டிற்கு' என்ற விவரம் எழுத வேண்டும்.

மானேஜர்

என்னனைய முனிவரவ ரெந்நாளு முலகில்
இன்பமெழச் செய்தவங்க ளெல்லாந்திரண் டாலும்
உன்னரிய தவத்துக்கிங் கீடாகா தப்பா
உள்ளமதை ஒளியாமல் உரைத்திடுவேன் கேளாய். 4

தினம்வாட்டு மென்வினைகள் தீர்ந்தின்றே உய்ந்தேன்
செப்பரிய சீரெலாம்நின் செல்வனிடங் கண்டேன்
மனம்விரும்பிச் செய்தவத்தால் மைந்தனைப் பெற்றாய்
மாநிலத்தி லுன்னைப்போல் மகராஜ னுண்டோ ? 5

வேறு

ஆயிர மாண்டிற் கோர்முறையே
அரிதா யலரும் அற்புதமலர்
தோயுந் துன்பந் தூரகற்றித்
தூய வாழ்வை நல்குமலர். 6

அன்புத் தேவும் ஒழுகுமலர்
அறிவு மணமும் நிறைந்தமலர்
மன்பதைக் காக யாவையுமே
வாழ்வில் தியாகஞ் செய்யுமலர். 7

இருளைப் போக்குஞ் சோதிமலர்
என்றும் விரும்பும் இன்பமலர்
அருளைப் பொழியுங் கற்பகமலர்
அன்ப ரகமே அலரும்மலர். 8

உள்ளும் புறமும் துறந்துன்சேய்
உலக ரக்ஷகனாய் விளங்கிடுவான்
வள்ளல் பிரிவில் மகிழ்வதுபோல்
வாழ்வி லின்பம் வேறுண்டோ ? 9

## புதிய ஜீவிய சந்தாதார்

இவ்வாண்டு நமது "ஆனந்தபோதினி"க்கு, சிலோன் கொழும்பு, குவாரண்டைன் ஆபீஸைச் சேர்ந்த ஸ்ரீ வி. **கனகசபாபதி** அவர்கள் ஜீவிய சந்தாதாரராகச் சேர்ந்துள்ள நற்செய்தியைப் பெரு மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்ளுகிறோம். நம் "ஆனந்தனை" ஆதரவு செய்யும் நோக்கத்துடன் ஆயுட் சந்தாதாரராக முன் வந்த ஸ்ரீ வி. கனகசபாபதிக்கு நமது மனப்பூர்வமான நன்றியறிதலைச் செலுத்துவதோடு, அப் பெரியாரது உதாரணத்தை மற்ற அன்பர்களும், செல்வர்களும் பின் பற்றுவார்க ளென்று நம்புகிறோம். **ஆசிரியர்.**

# மகளிரைப் பழிப்பது தகுதியா?

(துரை.)



'மாதர் தம்மை இழிவு செய்யும்
மடமையைக் கொளுத்துவோம்.' —பாரதியார்.

இப் பரந்த நிலவுலகில் வாழும் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈருக உள்ள எல்லாவற்றிலும் ஆண், பெண் என இரு வகையான பகுப்பு இருந்து வருகிறது. இவ்விரு பிரிவும் உலகம் நடை பெறுதற்கு இன்றியமையாதன வாகும். ஆணை யின்றிப் பெண் அமையாது; பெண்ணை யின்றி ஆண் அமையாது. ஆண்டவன் முன்னிலையில் ஆண் பெண் இரண் டும் சமமே. ஆண் பெண்களிடையே சில அவயவ வேறுபாடன்றி வேறொரு வேற்றுமையு மில்லை. அவ் வவயவ வேறுபாடும் முக்கியமாக உலக உற் பத்திக்கும், ஆண் பெண் இருவரும் ஒருவரை யொருவர் விரும்பி அன்பு பூண்டு ஒன்றுபட்டு வாழ்தற்கும் அத்தியாவசியமாக வேண்டி யிருக்கிறது. ஆணும் பெண்ணுங் கலந்து இன்புற்று வாழ வேண்டுமென்ற நோக்கத்தோ டேயே இறைவன் இவ் வுலகத்தைப் படைத் திருக்கிறான் என்ற உண் மையை உணர்ந்த நம் முன்னோர்கள், ஆணைப் பெண்ணும், பெண்ணை ஆணும் சமமாகப் பாவித்து அன்பு பூண்டு ஒருவர் மற்றொருவர்க்கு உதவி யாக இருந்து உலகஇன்பங்களை யனுபவித்து வந்தனர். அக் காலத்தில், மக்களில் ஆணாகப் பிறந்தவர்களெல்லாம் உயர்ந்தவர்களென்றும், புண்ணி யஞ் செய்தவர்களென்றும், பெண்களெல்லாம் இழிதகைமை யுடையவர்க ளென்றும், பாவப் பிறவிகளென்றும் கருதும் வழக்கமில்லை.

பண்டைக் காலத்துள்ள மக்களில் தன்னல மிக்க ஒரு சாரார் தோன் றிப் பெண்கள் ஆண்மக்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யும் அடிமைகளென்றும், காமக் கழிவிடங்களென்றும், பிள்ளை பெறும் இயந்தி

---

இக்கட்டுரையை, நான் 1934-ம் ஆண்டில், தமிழ்ப் பேரறிஞர்-மணி. திருநாவுக்கரசு முதலியார் ஆசிரியராயிருந்து நடத்திவந்த 'தமிழரசு' என் னும் இலக்கியத் தமிழ்ப் பத்திரிகையில் எழுதியிருந்தேன். இக்கட்டுரை வாயிலாக நான் எழுப்பியிருந்த ஐயவினவுக்கு என்ன காரணத்தாலோ விடை கிடைக்கவில்லை. இந்நிலையில் இக்கட்டுரை யாழ்ப்பாணத்திலிருந்து வெளியாகும் 'இந்து சாதனம்' என்னும் தமிழ் வாரப் பத்திரிகையில் 24-5-34-ந் தேதி இதழில், 'பெண்கள் ஆண்களுக்கு அடிமைகளா?' 'அடிமைகளா யிருப்பது ஆண்டவனின் திருவுளமா?' 'சுயநலப் புலிகளது போலிக் கொள்கைகள்.' 'வில்லிப்புத்தூரர் பெண்களைப்பற்றிக் கொண் டுள்ள கருத்து என்ன?' என்றெல்லாம் பல தலைப்புகளுடன் வெளி வந்தது. ஆனால், அதில் என் பெயர் காணப்படவில்லை. அதற்குப் பதிலாக, புலோலி: பண்டிதர் தி. க. கந்தையா பிள்ளை என்று பொறிக்கப்பட் டிருந்தது. 'தமிழரசு' பத்திரிகாசிரியர் அப்பத்திரிகையைக் காட்டி விஷயத்தைத் தெரிவித்தபோது, எனக்குப் பெருவியப்புந் திகைப்பும் ஏற்பட்டது. நடந்த விஷயம் இதுதான். நான் 'தமிழரசி'ல் எழுதியதை, யாழ்ப்பாணத்திலுள்ள பண்டிதர் தி. க. கந்தையா பிள்ளை அப்படியே 'காப்பி'யடித்து எழுதி 'இந்து சாதனத்'தில் வெளி வருமாறு செய்து விட்டார். இதில் ஆச்சரிய மென்ன வென்றால், இந்து சாதனம் பத்திரிகாசிரியர் முன்பின் கவனியாது

ரங்கள் என்றும் எண்ணத் தலைப்பட்டு, அவர்களுக்குச் சமத்துவந் தருவதை யொழித்து, உரிமைகளை யெல்லாம் பறிமுதல் செய்து, அவர்களைத் தங்க ளுக்கு அடங்கி நடக்கும்படி செய்தற்குரிய கொடிய கட்டுத் திட்டங்களை யெல்லாம் விதித்து அடிமைகளாக நடத்தத் துவங்கிய பின்னரே, மக்க ளிடையே பெண்களை இழிவாக எண்ணும் எண்ணம் வேரூன்றலாயிற்று. மேலும், அச் சுயநல மிக்க ஆடவர்கள், ஆண் மக்கள் வன்மையான தேகத் தைப் பெற்றிருத்தலால், அவர்கள் வல்லியற்கைக் கேற்றவாறு, வெளியே சென்று நிலத்தைப் பண்படுத்தி உழவு வேலை செய்தலும், அதனு லேற்படும் விளைபொருள்களை விற்றலும், போர் செய்தலும் முதலானவைகளைச் செய்தும், பெண் மக்கள் மெல்லிய உடம்பை யுடையவர்களா யிருந்தமை யால், அம்மெல் லியற்கைக் கியைய வீட்டிலிருந்து, கல்வி கற்றல், நூல் நூற்றல், துணி நெய்தல், சமையல் வேலை செய்தல் முதலானவைகளைச் செய்தும் வந்ததைக் கண்டு, அவர்கள் உடற்கூற்றுக் கேற்றவாறே ஆண் களுக்குத் திடசித்தமும், பெண்களுக்குச் சபல சித்தமும் இருக்கிறதென்று அறிவிலும் பேதத்தைக் கற்பித்து, ஆண்கள் ஒன்றிலேயே உறைத்து நிற் பார்களென்றும், பெண்கள் மனம் கணத்துக்குக் கணம் மாறக் கூடிய தென்றும், ஆயிர மனமுடையவர்க ளென்றும், ஆதலால் அவர்களிடத்துக் கற்பு கிடையா தென்றும் போலிக் கொள்கைகளைப் பரப்பலாயினர்.

இச் சுயநலப் புலிகளது போலிக் கொள்கையை அடிப் படையாகக் கொண்டே பல நூல்கள் செய்யப்பட்டன. அந் நூல்களை இயற்றியவர்க ளெல்லாம் பெரும்பாலும் துறவிகளே யாவர். எடுத்துக் காட்டாகச் சில செய்யுள்களைக் காண்போம்.

'பெண்ணெனப் படுவ கேண்மோ!
பீடில; பிறப்பு நோக்கா;
உண்ணிறை யுடைய அல்ல;
ஓராயிர(ம்) மனத்த வாகும்
எண்ணிப் பத்து அங்கை யிட்டால்
இந்திரன் மகளும் ஆங்கே

---

வெளியிட்டதுதான். இக்கட்டுரை யாழ்ப்பாணத் தமிழரின் உரை நடை யாக இல்லாததைக்கூட அவர் கவனிக்க வில்லை. தமிழரசு காரியாலயத் தார் தங்கள் பத்திரிகையில் வந்த விஷயத்தை வேறொருவர் பெயரால் வெளியிட்டது முறையா? என்று கேட்டுச் சமாதானங் கூறுமாறு கடிதம் விடுத்தனர். அதற்கு இந்து சாதனம் பத்திரிகாசிரியர் பதிலே எழுதவில்லை. ஆனுல், இந்து சாதனம் 4-6-34-ந் தேதி இதழில், வதிரி தேவரையாளிச் சைவ வித்தியாசாலை சி. வில்லிபுரம் என்பார் மேற்குறித்த கட்டுரைக்கு எழுதியிருந்த மறுப்பு வெளியிடப்பட் டிருந்தது. இவ்விதம் என் கட்டுரை யாழ்ப்பாணம் பண்டிதரொருவரால் கவரப்பட்டு வெளிவந்தாலும், நான் எழுப்பிய ஐயவினவுக்கு அறிவுடைய விடைகள் வருமானல் சரிதான் என்று எண்ணி ஆறுதலுற்றேன். ஆனல், ஒருவருடைய ஆட்சேபத்துடன் அது நின்று விட்டதால், என் அறிவுத்தாகம் அடங்கவில்லை. ஆகவே, நான் காணும் தமிழறிஞர்களை யெல்லாம் இப்பாடல் பற்றி அபிப்பிராயங் கேட்ப துண்டு. என் மனம் திருப்தி யேற்படும்படியாக இதுவரை யாரும் எனக் குப் பதில் சொல்லவில்லை. திடீரென உணர்ச்சி தூண்டப் பெறவே, இக்கட் டுரையை 'ஆனந்தபோதினி'க்கு அனுப்பலானேன். அறிஞர்கள் தங்கள் கருத்தைத் தெரிவித்து என்னுடைய ஐயத்தைத் தெளிவிப்பார்கள் என்று நான் நம்புகிறேன்.

வெண்ணெய்க் குன்று எரியுற்றாற்போல்
மெலிந்து பின்னிற்கும் அன்றே.'

'அன்புநூலாக இன்சொல் அலர்தொடுத்து அமைந்த காதல்
இன்பஞ்செய் காமச்சாந்திற் கைபுனைந்து ஏற்றமாலை
நண்பகற் சூட்டிவிள்ளாது ஒழுகினும் நங்கைமார்க்குப்
பின்செலும் பிறர்கண் உள்ளம் பிணையனார்க் கடியதன்றே.'

'ஏந்துஎழில் மிக்கான் இளையான் இசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த
நயனுடை இன்சொல்லான் கேள்எனினும் மாதர்க்கு
அயலார்மேல் ஆகும் மனம்.'

என்று முறையே திருத்தக்கதேவரும், குமரகுருபர சுவாமிகளும் பாடியிருக்கின்றனர். ஆனால், தமிழ் மறையை அருளிய திருவள்ளுவ நாயனார் போன்ற இயற்பாவலர்கள் பெண்களைத் தெய்வமாகப் போற்றுகிறார்களேயன்றி, இவ்வாறு இழித்து ஓர் இடத்திலேனுங் கூறவில்லை. ஆனால் இப் போலிக் கொள்கையாகிய விஷம் தலைக்கேறப் பெற்ற ஒரு சிலர், திருவள்ளுவர் போன்றவர்கள் பரத்தைகளைப் பற்றிக் கூறும் பாக்களைப் பொதுவாக எல்லாப் பெண்களுக்கும் சம்பந்தப்படுத்திப் பொருள் கூறிப் பல மக்களைக் கெடுக்கின்றனர். அந்தோ! அத் தீவினையை என்னென்பது!

* * * *

சமீபத்தில் ஒரு நாள் மாலை நான் கடற்கரையில் ஒரு தமிழ்ப் புலவருடன் உரையாடிக்கொண் டிருந்தபோது, அவர் பின்வரும் வில்லி பாரதச் செய்யுளைக் கூறி அதற்குப் பொருள் கூறுமாறு கேட்டார்:

**'ஐம்புலன் களும்போல் ஐவரும் பதிகளாகவும் இன்னம் வேறொருவன்**
**எம்பெருங் கொழுந னுவதற்கு உருகும் இறைவனே எனதுபே ரிதயம்;**
**அம்புவிதனிற் பெண் பிறந்தவர் எவர்க்கும் ஆடவ ரிலாமையின் அல்லால்**
**நம்புவதற்கு உளதோ என்றனள் வசிட்டன் நல்லற மனைவியே யனையாள்.'**

இப்பாடல் மகாபாரதம் ஆரணிய பருவம் பழம்பொருந்து சருக்கத்தில் உள்ளது. பாண்டவர்கள் வனத்தில் இருக்கையில் ஒரு நாள் துரோபதையின் வேண்டுகோளின்படி விஜயன், அமித்திரன் என்னும் முனிவன் உண்ணும் நெல்லிக் கனியை மரத்தினின்றும் பறித்து அவளுக்குக் கொடுத்தான். பின்னர், அக்கனி மேற்படி முனிவனுக்கு உணவாக அமைந்தது என்று தெரிந்த அர்ச்சுனன், விஷயத்தைத் தரும புத்திரனுக்குச் சொல்லவும், அவர் முனிவன் சாபத்துக்கு ஆளாக நேருமே என அஞ்சிக் கவலையுற் றிருக்குங்கால், நகுலன் யோசனைப்படி ஸ்ரீ கிருஷ்ணபகவானை வரவழைத்து, அதற்குப் பரிகாரந் தேடும்படிப் பாண்டவர்கள் வேண்டினர். அப்போது ஸ்ரீ கிருஷ்ணன், பாண்டவர் ஐவரும், துரோபதையும் தங்கள் உள்ளத்தில் உள்ளதை உண்மையாக உரைத்தால், அப்பழம் மரத்தில் சென்று பொருந்தும் என்று சொன்னான். அவ்விதமே பாண்டவர்கள் தங்கள் மனத்தினியல்பைக் கூறினர். பின்னர், துரோபதை தன் மன நிலையை விரித்துரைத்தாள். அச்சமயம் அவள் உரைத்த பாடலே மேற் குறிக்கப்பட்ட செய்யுளாகும்.

இப்பாடலுக்கு யான், 'வசிட்ட முனிவனது தரும பத்தினியாகிய அருந்ததியை ஒத்தவளான துரோபதை, 'இறைவனே! மாலிடர்களுக்கு மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய ஐம்புலன் இருப்பதுபோல, எனக்குப் பாண்டவர் ஐவரும் தலைவர்களாக இருக்கவும், மற்றும் ஒருவன் எனக்குக் கணவனாக வேண்டுமென்று என் உள்ளம் உருகுமோ? ஒருக்காலும் உருகாது. ஆனால், இப்பூமியில் பெண்ணாய்ப் பிறந்த எத்தகைய கற்பரசியையும், அவளுடைய அழகு கருதி விரும்பாத ஆண்மக்கள் இல்லையாதலால் சந்தேகத்துக்கு இடந் தருகிறது என்று கூறினாள்' என்று பொருள் கூறி, பேரழகுடைய பெண்ணொருத்தி யிருப்பாளாயின், அவள் பிற ஆடவரை மனத்தாலும் எண்ணாத கற்பரசியாயினும், அவளைப் பார்க்கும் ஆண்மக்கள் அவளை எவ்வாறாயினும் அடைய வேண்டுமென்று விரும்புகின்றனர் என்ற உலக நடையையும் விவரித்து உரைத்தேன்.

இதைக் கேட்ட அப்புலவர் நகைத்து, 'இப் பாட்டிற்கு நீர் உரைத்தது சரியான பொருளன்று: நீர் இளைஞராதலால் பெண்டிரியல்பை யுணராது இப்பொருள் கொண்டீர்! நான் சொல்லுகிறேன் கேளும்: வசிட்டன் பன்னியாகிய அருந்ததியை ஒத்த கற்புடைய துரோபதை, 'இறைவனே! என் மனம் ஐம்புலன்களைப்போல ஐந்து கணவன்மாரிருந்தும் இன்னும் வேறொருவன் என் கணவனாவதற்கு உருகுகின்றது. ஏனெனில், இவ்வுலகில் பிறந்த பெண்கள் எவரையும் திருப்தி செய்யக்கூடிய ஆடவர் இல்லையாதலால், அவர்களை நம்புவதற்கில்லை' என்று கூறினாள்' என்று உரைத்தார். மேலும் அவர், 'பெண்கள் சபல சித்த முடையவர்கள், இத் துரோபதையும் பாண்டவர்களை யல்லாது கன்னனையும் விரும்பி யிருக்கிறாள்: அவர்கள் சமூகக் கட்டுத் திட்டங்களுக்கு அடங்கி நம் ஆளுகையில் இருக்கிறார்கள்; இல்லையேல் அவர்கள் நம்மை ஏய்த்து விடுவார்கள்' என்று வியாக்கியானங் கூறினார். இதைக் கேட்டுப் பொறாத நான், 'ஆசிரியர் வில்லிப்புத்தூரார் கருத்து தாங்கள் கூறும் பொருளுக்கு ஏற்புடைத்தாக இருக்குமென்று நான் நினைக்கவில்லை. அவர் இயற்றியுள்ள அப் பாடலின் போக்கைப் பார்த்தாலே தங்கள் கொள்கைகளுக்கு முரணா யிருக்கிறது. 'ஐம்புலன்களும்போல் ஐவரும் பதிகளாகவும்' என்ற சொல்லமைப்பும், 'இன்னம் வேறொருவன் எம் பெருங் கொழுநன் ஆவதற்கு உருகும்? எனது பேரிதயம்' என்ற சொல்லமைப்பும் துரோபதையின் தூய மனத்தைக் காட்டும் பளிங்காக அமைந்திருக்கிறது. 'பதிகளாகவும்' என்ற சொற்பிரயோகத்தை ஆழ்ந்து நோக்குங்கள். தாங்கள் சொல்லும் வண்ணம் துரோபதையின் மனம் வேறொருவனைக் கணவனாக விரும்புமாயின் அது 'பேரிதய' மாகாது? அவ்வாறு கண்டவர் மீதெல்லாம் மனதைச் செலுத்துபவளாயின், துரோபதையை ஆசிரியர், 'வசிட்டன் நல்லற மனைவியே யனையாள்' என்று கற்பரசி யெனச் சிறப்பித்துக் கூறுவரோ? ஆதலால் தாங்கள் துரோபதையை இழித்துக் கூறிப் பெண்ணுலகை மாசுபடுத்துவது பொருந்தாது?' என்று வாதாடினேன்.

எனினும், அப்பெரியார் அதை யொப்புக் கொள்ளாது அவர் கொள்கைக்கு அரண் செய்வனவற்றை யெல்லாம் எடுத்து வாயோயாது சோனாமாரிபோல் பொழிந்தார். இதனால் என் மனமும் மருண்டது. அப் பாட்டுக்கு அவர் கூறும் பொருளும் இருக்குமோ என்றும் ஐயுறலானேன். எனவே, நமது, 'ஆனந்தபோதினி' வாயிலாக வெளியிட்டால், உண்மையுணர்ந்து தெளியலாமென்று இதில் இது பற்றி வரையலானேன். நுண்மாண் நுழைபுலமுடைய பெரியார்கள் இவை யனைத்தையும் சீர்தூக்கிப் பார்த்து பொருள் இதுவென நாடிப் புகலெய்துமாறு எதிர்விழைக்கிறேன்.

# வயதானவரின் அநுபவம்

("கனி")

"முதிர்ந்த அனுபவமுள்ள இளைஞனாக் ஆக்கிவிடு ஈசா" என்று யாரோ ஒருவர் பிரார்த்திப்பதாக ஆங்கில இலக்கியத்திலே படித்திருக்கிறேன். இலக்கியத்தைச் சுவைப்பதற்கு இளமைப் பருவம் மிகப் பொருத்தமானது. அந்த இளமைப் பருவத்துடன் (நான் இளமைப் பருவம் என்பது 'வாலிபப் பருவம்' என்பார்களே அதை) முதிர்ந்த அனுபவ ஞானமும் இருந்து விட்டால் வேறு என்ன வேண்டும்? இளைஞனாகிய எனக்கு, 'என்பது வயதானவரின் அனுபவம் நமக்கு வந்து விடக் கூடாதா, பல நூல் கற்றுத் தேர்ந்தோரின் நெற்றியில் காணப்படும் கோடுகள் நமக்கும் இருக்கக் கூடாதா,' என்றெல்லாம் பல தடவைகளில் தோன்றிய துண்டு. ஒரு நாள் இந்த ஆசை அளவு கடந்து விட்டது. காரணத்தைச் சொல்லி விடுகிறேன். பிறகு என்னைப் பற்றி என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளுங்கள்.

எங்கள் பேராசிரியர் வீட்டிற்கு நான் அடிக்கடி போவேன். அவர் வாயிலிருந்து சிதறும் இலக்கியத் தேனுக்காக வண்டு போல் அங்கேயே வளைய வளைய வருவேன். நான் மட்டுமல்ல. இன்னுஞ் சிலர் இந்த மாதிரி வருவார்கள். எங்கள் பேராசிரியரிடம் மிகுந்த மதிப்புள்ளவர் ஒரு பெரியவர். முதிர்ந்த வயதினர். அவரும் எங்கள் ஆசிரியர் வீட்டிற்கு அடிக்கடி வருவார். தமிழில் நல்ல ஞானமுள்ளவர். பேசும் பொழுதுங்கூட சுத்தமான இலக்கணத் தமிழில்தான் பேசுவார். ஆசிரியருக்கும் அவரிடத்தில் ஒரு தனிப் பற்றுதல். அடிக்கடி ஆசிரியர் கூறுவனவற்றுக்கு ஒரு உதாரணத்தையோ, மேற்கோளையோ கொடுத்து அவற்றை அழகு படுத்துவார். அவரை நாங்கள் 'பெரியவர்' என்ற சிறப்புப் பெயராலேயே அழைத்து வந்தோம்.

ஒரு நாள் எங்கள் ஆசிரியர் தமது ஆச்சரியமான அனுபவமொன்றைக் கூறினார். சமீபத்தில் நடந்ததாம் அது: ஒரு பையனுக்கு உடம்பில் சிரங்கு வந்தது. மேலெல்லாம் புண். நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே வந்தது சிரங்கு. கைகால்களெல்லாம் அழுகி விடும்போல் ஆய்விட்டன. அந்தப் பையனின் தந்தைக்கு என்ன செய்வது என்றே தெரியவில்லை. பிரபல டாக்டர் ஒருவர் சிகிச்சை செய்தார். கொஞ்சமும் குணந் தெரியவில்லை. நாலைந்து வைத்தியர்களிடம் பையனைக் கொண்டு சென்றார். அவர்கள் கொடுத்த மருந்து சிறிதும் குணமளிக்கவில்லை. பையன் உடல் நிலை மோசமாக ஆகிக்கொண்டிருந்தது. கடைசியில் தந்தை ஒரு வைத்தியரிடம் சென்றார். அவர் ஒரு மருந்தைக் குறித்துப் பையனுக்கு வாங்கிக் கொடுக்கும்படி சொன்னார். குறிப்புத் தாளைப் பார்த்த தந்தையின் முகம் சுண்டியது. வைத்

தியரை நோக்கி அவர் சொன்னார், "என்ன ஐயர், இதே மருந்தைத்தான் இதற்கு முன்னும் இரண்டுபேர் கொடுக்கச் சொன்னார்கள். நானுங் கொடுத்துப் பார்த்து விட்டேன். ஒரு குணத்தையுங் காண வில்லையே. இப்போதும் அதை எப்படிக் கொடுப்பது?" வைத்தியர் புன்னகை புரிந்தார்.

"அதைப் பற்றிப் பயப்பட வேண்டாம். இந்தத் தட்வையும் அதே மருந்தைக் கொடுங்கள். ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம்" என்று தைரியம் சொல்லி அனுப்பினார். தந்தையாரும் அதே மருந்தை வைத்தியர் குறிப்பிட்ட அளவ கொடுத்து வந்தார். வைத்தியரும் கவனமாகக் கண்காணித்து வந்தார். என்ன ஆச்சரியம்! எட்டே நாட்களில் சிரங்கு உப்புப்போல் உதிர்ந்து விட்டது. அழுகிய தேகம் சுத்தமாக ஆய்விட்டது. பையன் தந்தையின் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அளவு கடந்து விட்டன. இதன் இரகசியத்தை அவர் வைத்தியரிடங் கேட்டார். "நான் கொடுத்ததும் எனக்கு முன் பார்த்தவர்கள் கொடுத்ததும் ஒரே மருந்துதான்—சிரங்குக்குக் கொடுக்கவேண்டிய மருந்துதான். ஆனால் எந்த மருந்தைக் கொடுக்க வேண்டுமோ அதை மட்டுங் கொடுத்து விட்டால் போதாது. அது இந்த அளவில் தான் கொடுக்க வேண்டும், இவ்வளவு நேரத்திற் கொருதட்வை தான் கொடுக்க வேண்டும் என்று ஒரு கணக் கிருக்கிறது. இந்த அளவு, காலம் இவற்றில் எவ்வித வித்தியாச மேற்பட்டாலும் வியாதி குணப்படுவது சந்தேகந்தான்" என்றார் வைத்தியர்.

இதைச் சொல்லிய எங்கள் ஆசிரியர் மருந்து கொடுத்து விட்டால் மட்டும் போதாது; அது கொடுக்க வேண்டிய அளவு மிக மிக முக்கியம் என்பதை எடுத்துக் காட்டினார். அவர் முடித்ததும் எங்கள் பெரியவர், "இதைத் திருவள்ளுவரேதான் சொல்லி இருக்கிறாரே. மருந்து என்ற அதிகாரத்தில் முதல் குறளிலேயே வள்ளுவர் இதைக் கூறி எச்சரிக்கை செய்கிறார் பாருங்கள்:

'மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று'

ஒரு மருந்து எந்த அளவுக்குக் கொடுக்கப்பட வேண்டுமோ அந்த அளவைவிட மிகுந்தாலும் குறைந்தாலும் நோயை அதிகமாக்கும் என்பதுதானே அவர் சொல்லி இருப்பது" என்றார்.

ஐரோப்பிய இலக்கியங்களிலும், தமிழிலக்கியத்திலும் பெரும் பாண்டித்ய முடைய எங்கள் பேராசிரியரே ஆச்சரியத்தில் அமிழ்ந்தா ரென்றால் எங்கள் வியப்பைக் கேட்கவா வேண்டும்? மருந்து என்ற அதிகாரம் நாங்கள் யாவரும் படித்ததுதான். எங்கள் ஆசிரியர் மிக நன்றாக அறிந்ததுதான். ஆனால் அந்த இடத்தில் அதைப் பற்றி நினைத்துக் கூடப் பார்க்க வில்லை. எங்கள் ஆசிரிசரும் இதுவரை அதைப் பற்றிச் சிந்திக்கவே

# ரஷ்யாவும் போலந்தும்

(ந. கிருஷ்ணமூர்த்தி.)

ஐக்கிய நேச நாடுகளுக்கு போர்க்களத்தில் வெற்றிமேல் வெற்றி கிடைத்து வருகிறது. ஆப்பிரிக்காவி னின்றும் நாஜி அரக்கன் துரத்தப்பட்டான். தென்கிழக்கில் ஜப்பான் மடக்கப்பட்டு விட்டது. இருப்பதை ஏப்ப மிட சக்தியற்ற ஜப்பானை சீக்கிரத்தில் அடக்க வாஷிங்டனில் ஆலோசனை நடைபெற்றது. அமெரிக்காவுடன் இங்கிலாந்து அடிக்கடி கலந்தாலோசித்தாலும், ரஷ்யா சைன உறவு அவ்வளவு நாடப்படவில்லை. இக்குறைபாடு இருக்கும் நிலையிலே, லண்டனில் நிறுவப்பட்டுள்ள போலிஷ் சர்க்காருக்கும் சோவியத் சர்க்காருக்கும் தகராறு ஏற்பட்டிருப்பதாகச் சமீபத்தில் செய்தி யொன்று வெளியாயிற்று அல்லவா!

1939-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 17-ம் தேதி விடியற்காலை 2-15 மணிக்கு மாஸ்கோவிலிருந்த போலிஷ் ஸ்தானிகர் வாக்லாகிரி பாஸ்கி கிரம்லின் நிலையத்திற்கு அழைக்கப்பட்டார். போடம்கின் அவரை வரவேற்று அந்நேரம் முதல் போலந்து சிதைந்து விட்டதென்றும், அங்கு எத்தகைய சர்க்காரு மில்லையென சோவியத் சர்க்கார் நினைப்பதாகவும், ஆகவே அவ்விரு நாடுகளிடையுள்ள எல்லா ஒப்பந்தங்களும் நழுவின எனவும் தெரிவித்து கிழக்கு போலந்தை ஆக்கிரமிக்கப் போவதாகக் கூறினர். அதற்குள் சோவியத் சர்க்காரும் தங்கள் ராணுவத்தை கிழக்கு போலந்தை ஆக்கிரமிக்கச் சொன்னதுடன் 'யோசனை யற்ற தலைவர்களால் போர்த் துன்பத்தில் சிக்கிய போலிஷ் மக்களையும் காப்பாற்ற' உத்திர விட்டனர். ரஷ்யாவுடன் செய்து கொண்ட அனாக்கிரமிப்பு ஒப்பந்தத்தாலேயே தைரியங்கொண்டு ஹிட்லர் போலந்தைத் திடீரென்று தாக்கினரென்பது ஒருதலை. மேற்கில் ஹிட்லருடன் போராடிக் கொண்டிருக்கும் போலந்தைக் கிழக்கிலிருந்து ரஷ்யா ஆக்கிரமித்ததை அதன் சர்க்கார் முதுகில் குத்துவதுபோ விருந்தது என்றனர். 1932-ம் ஆண்டு ஜுலை மாதம் 25-ம் தேதி இரு சர்க்காரிடையும் அனாக்கிரமிப்பு ஒப்பந்தம் ஏற்பட்டது. அது 1945-ம் ஆண்டு டிசம்பர் 31-ம் தேதியே முடி வடைகிறது. ஆகவே, இத்தகைய 'மோசடி' ஏற்படுமென போலிஷ் சர்க்கார் எதிர்பார்க்கவேயில்லை. எனவே. இரு புறத்திலும் போர் புரிய இயலாமல் போலந்து சர்க்கார் நாட்டைவிட்டு வெளியேறினர்.

*  *  *  *

போலந்து நாட்டின் வரலாற்றைக் கவனிப்போமானல் அதற்கு ரஷ்யாவும், ஜெர்மனியும் எதிரிகளாயிருந்து அதன் சுதந்திரத்தை அழித்தது தெரியவரும். 1578-ம் ஆண்டிலேயே போலந்திலிருந்து லாட்வியாவையும், எஸ்தோனியாவையும் பிரிக்கப் பயங்கர ஈவான் என்ற அரசர் முயன்றார். அந்நாள் தொட்டு ரஷ்ய சர்க்கார் சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் போலிஷ் சர்க்காரில் தலையிடத் தொடங்கினன். தென்கிழக்கு பிரதேசத்திலிருந்த காசக் மக்களைக் கலகம் செய்யத் தூண்டினர். இன்று சோவியத் சர்க்கார் போலந்திலுள்ள உக்ரேனியர், ருதேனியர் பாதுகாப்பு தம் பொறுப்பு என்

---

இல்லை. பெரியவருடைய அனுபவந்தானே, அவர் அந்த இடத்தில் இவ்வளவு பொருத்தமாக வள்ளுவர் பெருமையை எடுத்துக் காட்டும்படி செய்தது.

ஆகவேதான், நான் முதலில் குறிப்பிட்ட ஆசை எனக்கு அன்று அளவு கடந்து விட்டது.

பதுபோல் 18-ம் நூற்ருண்டில் ரஷ்ய சக்கிரவர்த்தினி பெரிய காதரைன் சிறுபான்மை வகுப்பினர் நலன் காப்பு தன்னதென்று தலையிட ஆரம்பித்தார்.

1772-ல் ஜெர்மனி, ரஷ்யா, ஆஸ்திரியா மூன்றும் சில போலிஷ் பிரதேசங்களைக் கைப்பற்றின. அதற்கு முன்னர் போலந்து ஓடர் நதிக்குக் கிழக்கிலும் பால்டிக் கடலுக்கு தெற்கிலும் மேல் துவினு நதிக்கு மேற்கிலும் நீஸ்டர் நதிக்கு வடக்கிலுமுள்ள பிரதேசம் வரை பரவி யிருந்தது. எனினும், போலந்து தைரிய மிழக்காமல் 1791-ம் ஆண்டு மே 3-ந்தேதி தனக்குப் புதிய அரசிய லமைப்பு ஜனநாயக முறையில் வகுத்துக் கொண்டது. இதனைக் கண்டு ரஷ்யாவும், ஜெர்மனியும் அஞ்சி 1793-ல் போலந்தை வலுச் சண்டைக்கிழுத்து தோற் கடித்தது. ரஷ்யா கிழக்கு போலந்திலுள்ள மாகாணங்களை மேலும் எடுத்துக்கொண்டது. ஜெர்மனியோ பால்டிக் கடற்கரை பிரதேசங்கள் முழுமையையும்—டான்சிக் நகர் உட்பட—ஆக்கிரமித்தது. இவ் வநியாயத்தைக் கண்டு சகியாத போலந்து மக்கள் 1794-ல் தளபதி கோஸியாஸ்கோ தலைமையில் ரஷ்யா மீது படை யெடுத்து தோற்றனர். அதன் விளைவாக 1795ல் இறுதி பாகத்தையும் ரஷ்யா எடுத்துக் கொண்டது.

எனினும், போலிஷ் தேச பக்தர்கள் மனந் தளராமல் பிரான்ஸுக்குச் சென்று நெப்போலியன் உதவியை நாடினர். அவர்தம் ஒத்தாசையால் 1806ல் வார்ஷாவைச் சுற்றியுள்ள பிரதேசத்தில் ஒரு புதிய போலிஷ் சர்க்கார் ஏற்பட்டது. ஆனல் இறுதியில் நெப்போலியன் முறியடிக்கப் படவே 1815ல் வியன்னவில் கூடிய வல்லரசுகள் பால்டிக் கடல் பிரதேசம் ஜெர்மனிக் கென்றும் தென்கிழக்கு பிரதேசம் ஆஸ்திரியாவிற் கென்றும் வார்ஷா பிரதேசமும் கிழக்கு போலந்தும் ரஷ்யாவிற் கென்றும் உறுதிப் படுத்தின. கிராகௌ நகர் மாத்திரம் சுதந்திரமாக விடப்பட்டது. எனினும், இதனை 1846ல் ஆஸ்திரிய சர்க்கார் பறிமுதல் செய்து விட்டனர். 1830ல் போலிஷ் மக்கள் கிளர்ச்சி செய்யவே, வார்ஷா பிரதேசத்திற்கிருந்த சுய வாட்சியை ரஷ்யர் பறிமுதல் செய்தனர். 1863ல் மறுபடியும் போலிஷ் மக்கள் கிளம்பிய காலை அதன் தலைவர்கள் அனைவரும் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டு சைபீரியா அனுப்பப் பட்டனர்.

போலந்து குடியரசை நிறுவி அதனை வலுப்படுத்திய காலஞ் சென்ற மார்ஷல் பிலுடுஸ்கி 1887ம் ஆண்டு சைபீரியாவில் தண்டனை அனுபவிக்க நேர்ந்தது. 1892ல் சைபீரியாவி லிருந்து வந்த பிறகும் ரஷ்ய சர்க்கார் 1900ல் அன்னரைச் சுதந்திர இயக்கத்திலீடுபட் டிருந்ததற்காகச் சிறைப் படுத்தினர். 1918ம் ஆண்டு இறுதியில் பிலுடுஸ்கி போலந்தின் தலைவரானர்.

முதலில் லெனின் ஜார் சர்க்காரால் ஏற்பட்ட எல்லா ஆக்ரமிப்புகளையும் ஏற்கப் போவதில்லை எனக் கூறியிருந்தும் போலந்தை ஆக்கிரமிக்க சோவியத் படைகள் முயன்றன. 1920ல் வார்ஸா நகர் மீதே சோவியத் படைகள் முன்னேறின. அவைகளை ஆகஸ்ட் 15ம் தேதி முறியடித்த பிறகே, போலிஷ் சுதந்திரம் நிலை பெற்றது. அதனை 1921ம் ஆண்டு மார்ச் 18ம் தேதி ரீகா ஒப்பந்தப்படி சோவியத் ஏற்றுக் கொண்டது. 1923ம் ஆண்டிலே இதனை நேசநாடுகளும் ஏற்றன. இன்று ரஷ்யா ஆக்கிரமித்துள்ள கிழக்கு போலந்து சுதந்திர போலந்தின் சரிபாதி பரப்பு கொண்டது. அதன் மூன்றிலொரு ஜனத்தொகை இப் பிரதேசத்தி லிருக்கிறது. தென் கிழக்கு போலந்து எக்காலத்திலும் ரஷ்யர் ஆட்சியி லிருந்ததில்லை. அது ஆஸ்திரியா வீழ்ந்த பிறகு போலந்துடன் சேர்க்கப் பட்டது. எஞ்சிய போலந்து பிரதேசம் 1772ம் ஆண்டு பிரிவினைக்கு முன்னர் ரஷ்யர் ஆட்சியி லிருந்ததே யில்லை. இப் பிரதேசத்தில் ரஷ்யர் ஜனத்தொகை நூற்றுக்கு

ஒரு சத விகிதமே யிருக்கின்றன தென்பது மறக்கற்பாலதன்று. ரஷ்யர் ஆக்கிரமித்துள்ள பிரதேசம் போரின் பிறகு போலந்திற்கு விட்டுக்கொடுக்க முடியாதென ரஷ்யா கூறிவருவதே இன்றைய மனக் கசப்பிற்கு முக்கிய காரணம். 1939ம் ஆண்டில் கிழக்கு போலந்தில் போலிஷ் மக்கள் தொகை நூற்றுக்கு நாற்பதே யாயினும், அம் மரபினரே மற்ற இனத்தாரைவிட அதிகம். ஆகவேதான், போலந்து அப் பிரதேசம் தன்னுடனிருக்க வேண்டும் என்கிறது. சோவியத் ரஷ்யாவில் 1939ம் ஆண்டிற்கு முன்பே 10-லட்சம் போலந்து மக்கள் இருக்கின்றனர். அவர்கள் வதியும் பிரதேசங்கள் வரலாறுபடி போலந்திற்குச் சொந்தமே யாயினும், அம் மரபினர் தொகை அங்கு குறைந்திருப்பதால், அவற்றைப் போலிஷ் சர்க்கார் வெர் சேல்ஸின்போது கேட்கவில்லை.

ஜெர்மனியும், ரஷ்யாவும் வரலாற்றின்படி தனக்கு எப்போதும் எதிரிகளாயிருந்து வந்திருக்கின்றன வாதலால், போலந்து தான் ஒரு வல்லரசாக விளங்கினால்தான் தனது சுதந்திரத்தை நிலை நிறுத்திக் கொள்ள முடியுமெனக் கருதுகிறது. அவ்வாறு அது கருதுவதற்கு ஆதாரங்க ளில்லாமலில்லை. ஜர்மன் தொழிலாளர் சம தர்மம் பேசி வந்தாலும், ஹிட்லர் ஜெர்மன் சாதிப்பித்தைப் பரப்பிய காலை அதற்குச் செவி மடுத்தனர். ஆஸ்திரேலியாவில் தொழிலாளர் தலைவர் முதன் மந்திரியாயினும் அதனைக் கடவுள் கிருபையால் வெள்ளையர் நாடாக விருக்க முயலுவதாகக் கூறுகிறார். தத்துவ ஞானியாயினும் மார்ஷல் ஸ்மட்ஸ் இனப்பித்தை விடவில்லை. இன்னும் பல துறைகளில் சமதர்மமும், சமத்துவமும் பேசுவாரிடையே இத்தகைய பேதத்தன்மைகளைக் காணுகிறோம். ஆகவே, லண்டன் "டெயிலி ஹெரால்டு" எழுதியபடி சோவியத் தியாகத்தின் மீதுள்ள மோகத்தாலும், அதன் முறையிலுள்ள பற்றுலும், நாம் போலந்தின் நியாயத்தை அறிவதினின்றும் வழுவக்கூடாது.

---

(516-ம் பக்கத் தொடர்ச்சி.)

கிறோம். ஆகவே, வருகிற ஆவணி மாதத்தில் வரப் போகிற மணிவிழாவைச் சிறப்பாகக் கொண்டாட தமிழ் நாட்டிலுள்ள ஒவ்வொரு சபையும் ஒவ்வொரு தமிழ் மகனும் இப்போதிருந்தே முயல்வார்களென்று நம்புகிறோம்.

கடைசியாக, மணிவிழா கொண்டாட விரும்புவோருக்கு ஒரு வார்த்தை. திரு. வி. க. நீண்ட காலமாகவே, **சமரச சன்மார்க்க சங்கம்** ஒன்று இக்காலத்துக்கு ஏற்றவிதமாகக் காண வேண்டுமென்று பேசியும் எழுதியும் வந்திருப்பதை மக்கள் அறிவர். திரு. வி. க. நாட்டுக்கும் மக்களுக்கும் ஆற்றியுள்ள அரும் பெருந் தொண்டின் நினைவுக் குறியாகச் செய்யவேண்டிய செயல்களில் முக்கியமானது, அவர் உள்ளத்தில் உருக்கொண்டு வந்திருக்கும் சமரச சன்மார்க்க சங்கத்தை எங்கனும் ஏற்படுத்தி அவரது உயரிய கொள்கைகளை நிறைவேற்றி வரவேண்டியதாகும். அதுதான் மற்றெல்லாவற்றையும் விட, திரு. வி. க. வின் தன்னலமற்ற சேவையை நாமும் நம் சந்ததிகளும் என்றென்றும் நினைவில் வைத்து வேலை செய்வதற்குரியதாகும் என்று நாம் எடுத்துக் கூற விரும்புகிறோம்.

ஒரு மனே சித்திரம்.

# டேவிட் ஸ்வான்

## நத்தேனியல் ஹாத்தோர்ண்



(கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது.)

நிச்சயமாக நம்முடைய வாழ்க்கையையும், கடைசி லட்சியத்தையும் பாதிக்கக்கூடியவாறு பல விஷயங்கள் நடைபெறுவது நமக்கே தெரியாமல் இருக்கின்றன. இம்மாதிரி நடைபெறும் எத்தனையோ சம்பவங்கள் நம்மை வெகு சமீபமாக நெருங்கி வந்தும் நம்பால் யாதொரு மாறுதலும் உண்டாக்காமல் சென்று விடுகின்றன. அல்லது நம் உள்ளத்தில் அவற்றின் சாயையை இலேசாகப் படியச் செய்துவிட்ட மாத்திரத்தில் நின்று விடுகின்றன. நம் அதிர்ஷ்டங்களின் பல மாறுதல்களை முன் கூட்டி நாம் அறிந்து வைத்திருக்க முடியுமா? ஒரு மணி நேரங் கூட உண்மையான சாந்தியை பெறுதபடி வாழ்க்கையானது இன்ப துன்பங்களாலும், கஷ்ட நஷ்டங்களாலும் நிரம்பி யுள்ளது என்று நமக்குத் தெரியுமா? இந்த விஷயத்தை **டேவிட் ஸ்வான்** வாழ்க்கையின் ரகசிய சம்பவம் ஒன்ருல் அறிவோமாக.

அவனுடைய இருபதாவது வயதில், **போஸ்டன்** நகருக்குச் செல்லும் ரஸ்தாவில் அவனை நாம் பார்க்கும் வரைக்கும் அவனைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. **போஸ்டனில்** அவனுடைய மாமா ஒரு சிறு பல சரக்குக் கடை வைத்து நடத்துகிருர். தம் முடைய கடைக்கு டேவிட்டை கணக்குப்பிள்ளையாக வைத்துக் கொள்ளவேண்டும் என்னும் நோக்கத்தோடு அவனை வரச் சொல்லி யிருந்தார். **நியூ ஹாம்ப்ஷயரில்** ஒரு கௌரவமான குடும்பத்தில் பிறந்து, சாதாரணமான கல்வி கற்று, **கில்மாண்டன்** அக் கடமியில் ஒரு வருஷம் இலக்கியம் கற்றவன் டேவிட் என்ற விவரம் மட்டும் நமக்குத் தெரிந்தால் போதும். அன்று காலை சூரியோதயத்திலிருந்து வெயில் தகிக்கும் நடுப்பகல் வரைக்கும் கால் நடையாகவே நடந்து சென்றதால் அவனுக்கு மிகவும் அலுப்பாக இருந்தது. அதனுல் ஒரு சௌகரியமான இடத்தில், நிழலடியில் சிறிது உட்கார்ந்து விட்டு ஏதாவது ஜட்கா வந்தால் ஏறிப் போகலாம் என்று தீர்மானித்தான். அவனுக்காக வேண்டி வளர்த்து வைத்தமாதிரியே அங்கே சாலையோரம் தளிர்விட்ட பல சிறிய 'மாப்பில்' மரங்கள் இருந்தன. அவற்றின் ஊடேயுள்ள வழியோடு சென்ருல் ஒரு நீரூற்றைக் காணலாம். அந்த ஊற்றும் மற்ற வழிப் போக்கர்களைவிட டேவிட் ஸ்வானுக்காகவே ஊற்றைப் பெருக்குவதுபோல் இருந்தது. கன்னிப்பெண்ணை முத்தமிட்ட மாதிரி, தாகசாந்திக்காகத் தன் உலர்ந்த உதடுகளால் அந்த ஊற்றைச் சுவைத்துக் குடித்துவிட்டு சுனைக்கரைக்கு

வந்து சேர்ந்தான். தன்னுடைய சட்டைகள், கால் சராய் ஆகிய வற்றைத் தன் கைக்குட்டையால் கட்டி அதைத் தலையணையாகத் தலைக்கு வைத்துப் படுத்துக்கொண்டான். சூரிய கிரணங்கள் விழாதபடி நல்ல நிழலாக இருந்தது. முதல்நாள் மழை பெய்த தின் காரணமாக ரஸ்தாவிலிருந்து புழுதி கிளம்பவில்லை. அந்த இளைஞனுக்குத் தன் புல் அமளியானது பஞ்சு மெத்தையைவிட சுகமாக இருந்தது. அவனுக்குப் பின்பக்கம் சுனையில் விழும் ஊற்றுநீர் முணு முணுத்துக்கொண்டு இருந்தது; கனவில் அசைவதுபோல நீலவானை நோக்கி மரக்கிளைகள் ஆடிக்கொண் டிருந்தன. தன் ஆழமான அகட்டினில் பற்பல கனவுகளை வைத் திருக்கும் உறக்கம் அவனைத் தழுவியது. ஆனால், அவன் கனவு காணாத சில விஷயங்களைப் பற்றித்தான் இங்கே விவரிக்கப் போகிறோம்.

அந்த சமயத்தில், மரத்து நிழலில் அவன் தூக்கத்தில் ஆழ்ந் திருந்தான். ஆனால் மற்ற ஜனங்கள் விழித்தே இருந்தார்கள். கால் நடையாகவும், சவாரி செய்து கொண்டும், மற்றும் பல வாகனங்களில் ஏறிக்கொண்டும் வெயில் கொளுத்தும் அந்த ரஸ்தாவில் அநேகர் அவன் படுக்கை அறையின் பக்கமாய் போவதும் வருவதுமாக இருந்தனர். சிலர் இப்படி அப்படி திரும்பிப் பார்ப்பது கூடக் கிடையாது. அதனால் அவன் அங்கே படுத்திருப்பதும் அவர்களுக்குத் தெரியாது. சிலர் அவனை இலேசாகக் கடைக்கண்ணால் பார்த்துவிட்டுப் பழையபடியும் தம் சிந்தனைகளில் ஆழ்ந்தனர். இன்னும் சிலர் அவன் தன்னை யறியாமல் உறங்குவதைக் கண்டு சிரித்தனர். பிறரை இகழ்வதையே குணமாக உடைய பலர் அவனைப் பார்த்து மிகக் கேவலமாகப் பரிகசித்து விட்டுச் சென்றார்கள். நடுத்தர வயதுள்ள விதவை ஒருத்தி ஒருவரும் பக்கத்தில் இல்லாத சமயத்தில் அவன் படுத்திருக்கும் இடத்திற்கு வந்து "தூக்கத்திலும் எவ்வளவு வசீகரமாக சிரித்த முகத்தோடு தூங்குகிறான்" என்று சொல்லிவிட்டுச் சென்றாள். அவன் உறங்கிக் கொண்டிருப்பதைக் கண்ட மதுவிலக்குப் பிரசாரகர் ஒருவர் அன்று மாலையில் தாம் செய்த பிரசங்கத்தில், அளவுக்கு மீறிய குடியினால் போதையேறி தன்னுணர்ச்சி யற்றுப் போவதற்கு, அன்று சாலை யோரத்தில் ஒரு அத்தாட்சியைக் கண்டதாகக் குறிப்பிட்டார். ஆனால், இந்த ஸ்துதி, நிந்தை, பாராட்டு, கேலி எல்லாம் டேவிட் ஸ்வானுக்கு ஒன்றுதான். ஏன்? அதனால் ஒன்றுமே இல்லை என்று கூடச் சொல்லி விடலாம்.

அவன் தூங்க ஆரம்பித்த சில நிமிஷங்களுக்கு அப்புறம் அவ்வழியாக ஒரு இரட்டைக்குதிரை வண்டி வந்தது. டேவிட் ஸ்வானின் சயன அறைக்குச் சமீபமாக வந்ததும் அந்த வண்டியின் அச்சாணி ஒன்று கீழே விழுந்து விட்டதால் சக்கரம் சுழன்று வந்துவிட்டது. அந்த வண்டியில் போஸ்டனுக்குத் திரும்பிச் செல்லும் ஒரு வயது சென்ற வியாபாரிக்கும் அவர் மனைவிக்கும் இது ஒரு சின்ன தடங்கலாக இருந்தது. வண்டிக்காரனும்

வேலைக்காரனும் சேர்ந்து சக்கரத்தைச் சரியாக எடுத்துக்கொளு வும்போது அவ்விருவரும் அந்த மரநிழலில் சற்று உட்கார்ந்தனர். அப்போது அங்கே உள்ள நீரூற்றையும், அதன் பக்கமாக டேவிட் படுத்து உறங்குவதையும் கண்டார்கள். அவனைப் பார்த்தது அவர்களுக்கு அதிசயமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. அவன் திடுக்கிட்டு விழித்து எழுந்து விடாதவாறு, மிகவும் மெது வாக சந்தடியேற்படாமல் அவன் பக்கம் அந்த வியாபாரி நடந்து சென்றார். அவருக்கு கால்களில் வாதமும் கூட. அவருடைய மனைவியும் தன் பட்டுடைகள் 'சர சர'வென்று சத்தம் செய்யாத படி நடந்து சென்றாள்.

"எவ்வளவு சுகமாகத் தூங்குகிறான்" என குசு குசு என்று மெதுவாகச் சொன்னார். மேலும், "என்னமாதிரி மூச்சு விடு கிறான்! தூக்க மருந்து சாப்பிடாமல் இந்தமாதிரி உறக்கம் எனக்கு வருமானால், அந்த பாக்கியம் என் வரும்படியில் பாதிக்குச் சமா னம். இப்படித் தூங்கினால் எவ்வளவு சுகமாகவும் மனதிற்குக் கொந்தளிப்பில்லாமலும் இருக்கும்" என்றார்.

"வாலிபனாய் இருந்தாலும் நோய் நொடி இல்லாமல் இருந் தால்தான் இப்படித் தூங்க முடியும். இவனைப்போல் நாம் உறங்க முடியாது" என்றாள் அவர் மனைவி.

முன் பின் அறிமுகம் இல்லாத இந்த வாலிபனைப் பார்க்கப் பார்க்க அவர்களுக்கு அவன் மீது பிரியம் உண்டாகி விட்டது. சித்திரப் பட்டாடை மாதிரி மலர் நிறைந்த கிளைகள் கவிந்து கொண்டிருக்க, 'மாப்பில்' மரத்து நிழலும் அந்த இடமும் சேர்ந்து ஒரு ரகசிய அறையைப்போ லிருந்தது. அப்பொழுது சூரிய கிரணம் ஒன்று அவன் முகத்துக்கு நேராக விழுந்தது. உடனே, அதை மறைப்பதற்காக அவர் மனைவி ஒரு மரக்கொப்பை இலே சாக வளைத்து வைத்தாள். இந்த அற்பமான பரோபகாரச் செயலைச் செய்ததும் அவள் தன்னை அவனுடைய தாயாகப் பாவித்துக் கொண்டாள்.

அந்த அம்மாள் தன் கணவனைப் பார்த்து "கடவுள் தான் இவனை இங்கே படுக்கச் செய்து நம்மையும் இவன் பக்கம் இழுத் துக்கொண்டு வந்திருக்கிறார். இவனைப் பார்த்தால் நம் செத்துப் போன ஹென்றி மாதிரி இல்லை? இவனை நாம் எழுப்புவோமா?" என்று மெல்லிய குரலில் கேட்டாள்.

அந்த வியாபாரி "எதற்கு?" என்று தயக்கத்தோடு கேட்டு விட்டு, "இவனுடைய குணகுணங்கள் எப்படியிருக்கிறதோ? நாம் என்னத்தைக் கண்டோம்?" என்றார்.

"என்ன மலர்ச்சியான முகம்! என்ன அமைதியான நித் திரை!" என்றாள் அந்த அம்மாள்.

இந்தக் 'குசு குசு'ப் பேச்சினால் டேவிட்டின் இருதயத்திலோ, சுவாசத்திலோ, முகக் களையிலோ யாதொரு விதமான மாறுதலும் ஏற்படவில்லை. என்றாலும், அதிர்ஷ்ட தேவதை பொன்மூட்டை

யைக் கொடுத்து விடுவோமா என்று அவனைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தாள். அந்த வியாபாரி தம்முடைய ஒரே மகனை இழந்து விட்டதால் அவர் சொத்தை அனுபவிக்க வாரீஸ் இல்லாமல் போய்விட்டது. தூரபந்து ஒருவர் உண்டென்றாலும் அவருடைய நடத்தை அந்த வியாபாரிக்குத் திருப்திகரமாக இல்லை. இப்படிப்பட்ட சில சந்தர்ப்பங்களில் சில ஜனங்கள் ஜாலவித்தைக்காரனை விட விசித்திரமாக சில காரியங்களை செய்து விடுகிறார்கள். அதாவது, வறுமையால் சோர்ந்து போன எவனாவது ஒருவனுக்குத் தம் சொத்து சுகங்களைக் கூடக் கொடுத்து விடுகிறார்கள். இல்லையா?

ஆகவே, இந்தமாதிரி ஒரு எண்ணத்தை வைத்துக்கொண்டு, "இவனை எழுப்புவோமா?" என்று கேட்டாள் அவர் மனைவி.

அப்போது பின்னால் இருந்து, "வண்டி தயாராய் விட்டது, ஐயா" என்று வேலைக்காரன் குரல் கேட்டது.

உடனே அவர்கள் இருவரும் வண்டியை நோக்கி நகர்ந்த வண்ணம், முன் பின் அறியாமல் தூக்கிக் கொடுப்பது போன்ற கேலிக்கூத்தான காரியத்தைச் செய்ய முன்பு எப்பொழுதாவது, கனவிலாவது நினைத்தது உண்டா என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டே சென்றார்கள். பழைய படியும் அந்த வியாபாரி வண்டியில் ஏறி அமர்ந்து கொண்டு, கெட்டுப்போன வியாபாரிகளுக்கு ஒரு உதவி ஸ்தாபனம் நிர்மாணிக்கும் விஷயத்தைப்பற்றி மனதிற்குள்ளேயே திட்ட மிட்டுக்கொண்டு சென்றார். அப்போதும், டேவிட் தன் சுகநித்திரையைச் சுகித்துக் கொண்டிருந்தான்.

அந்த வண்டி ஒன்றிரண்டு மைல் கூடப் போ யிருக்காது. அப்போது அழகென இளம்பெண் ஒருத்தி உல்லாஸமாக அந்தச் சாலை வழியே ஆடி ஆடி நடந்துகொண்டே வந்தாள். அந்த நடையானது, அவளுடைய மார்பு என்ற அரங்கில் அவள் உள்ளம் எவ்வளவு சந்தோஷமாகக் களிக் கூத்தாடுகிறது என்பதை எடுத்துக் காட்டியது. இப்படி நடந்து வந்ததினால் தான் அவளுடைய பட்டினால் செய்த இடைக்கச்சு அவிழ்ந்து விட்டுபோயிருக்கிறது. அது அவிழ்ந்து விட்டதை உணர்ந்ததும் அதை முடிந்து உடையைச் சீர்படுத்திக்கொள்ள அந்த 'மாப்பில்' மரங்களின் மறைவுக்கு வந்தாள். வந்ததும் ஊற்றருகில் டேவிட் உறங்குவதைப் பார்த்துக் கொண்டாள். உடனே வெட்கத்தினால் அவளுடைய முகம் ரோஜாப்பூமாதிரி சிவந்து விட்டது. அங்கே ஒரு இளைஞன் தூங்கிக்கொண்டு இருப்பதும், அவள் வந்த ஜோலியும்.........எவ்வளவு லக்ஷணமா யிருக்கிறது! அவ்வளவுதான். அரவமில்லாமல் அந்த இடத்தை விட்டுப் போய்விட நினைத்தாள். ஆனால், அந்த இளைஞனின் தலையைச்சுற்றி ஒரு விஷக்கடி வண்டு இரைந்து கொண்டிருந்தது. அதோடு இலைகளிடையிலும், சூரிய கிரணங்களிலும், இருண்ட நிழலிலும் சென்று சென்று பறந்து வந்தது. அப்புறம் அது டேவிட்டின் கண்ணிமையில் உட்காரப் போவதுபோல் தெரிந்தது.

(தொடரும்)

# விஞ்ஞானம் அரும்பல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், அண்ணாமலை நகர்)

மக்கள் உற்பத்தி நூலறிஞர், உலகின் பல பாகங்களிலும், ஆங்காங்கே புதைந்து கிடக்கும் பொருள்களைத் தோண்டி யெடுக்கின்றனர். அப்பொருள்கள், பண்டைக்கால மக்கள் வாழ்க்கையை அறிவுறுத்தும் உளவுகளாய் உள்ளன. நெடிது புதையுண்டு கிடந்த எலும்புக் கூடுகள் முதலானவை, எவ்வாறேனு முற்றும் அழிபடாது, காலாந்திரத்தில் கல்லாய் மாறு கின்றன. அவ்வாறுள்ள கற்கள், அவ் வெலும்புக் கூடுகள் முத லியவற்றின் வடிவுடனுள்ளன. அவை, 'கல்மாறிகள்' (பாஸில்ஸ்) எனப்படுகின்றன. மக்கள் வடிவைக் காட்டும் கல்மாறிகள் பல வற்றை மக்கள் உற்பத்தி நூலறிஞர் தோண்டியெடுத்துள்ளனர். அவ்வாறு வெட்டி யெடுக்கப்பட்ட, பண்டைக்கால மக்களின் எலும்புக்கூடுக் கல்மாறிகள் அகப்படும் இடங்களின் அண்மை களில், செம்மையாய் உருவாக்கப் பட்டனவையேயென ஐயுறு வண்ணம் காட்டுபவையாயுமான கற்கருவிகள் பலவும் கிடைக் கின்றன. இவற்றினின்று பண்டைக்கால மக்கள் கற்களைச் செப்ப னிட்டு ஆயுதங்க ளாக்கும் திறமையுட னிருந்தனர் என ஏற் பட்டது.

மிகவும் எளிமையான கல்லாயுதம் செய்வதற்கும் இயல்பான அறிவு அவசியம். ஆயுதங்களை உருவாக்குபவர், எவ்வகையான கற்கள் சிறந்தவை எனும் அறிவில் தேர்ச்சி யடைந்தவரா யிருக்க வேண்டும். அக் கற்கள் எவ்வெவ் விடங்களில் அகப்படும் என அறிதலும் அவசியம். அதாவது, தற்கால நில நூலறிஞரும் (ஜியாலஜிஸ்மஸ்), கனி நூலறிஞரும் (மினராலஜிஸ்ட்ஸ்) பெற் றுள்ள அறிவு, பண்டை மக்களிலும் சிறிது அரும்பி யிருந்தது. ஒரு கல்லைக் கொண்டு மற்றோர் கல்லைச் செதுக்கி உருவாக்குங் கால், பலவகையான கற்களின் பண்புகளைப்பற்றி அறியாதிருத் தல் இயலாது. பல விதமான கற்களில், எவை மிகக் கடின மானவை, எவை கடினம் குறைந்தவை என்பதைப் பற்றித் தெரிந்து கொள்ளல் இன்றியமையாத தாயிற்று. அதாவது, பலதிறக் கற்களின் கடினங்களின் தராதரத்தைப் பற்றின அறிவு வளர்ந்தது. இன்னும், கற்களை உருவாக்குங்கால், கற்கள் இயல் பாகவே சில வழிகளில் பிளக்கின்றன என்பதையும் அவர்கள் கவனித்திருக்க வேண்டும். அவ்வாறு தோன்றும் கமர்கள் பல வகையான கற்களில் பல்வேறு விதங்களில் ஏற்படுகின்றன என்பதைக் கண்டும் கற்களின் தராதரங்களைப் பற்றி நிற்கும் விடயங்களை அவர்கள் அறிய நேர்ந்தது. கல்லும் கல்லும் மோதும்போது, அவற்றில் ஏற்படும் அசைவுகளைப் பற்றியும் அறிய வாய்த்தது. அவை ஒன்றின்மீது ஒன்று படும்போது, ஓரோரமயம், பல்வேறு திக்குகளில் திரும்பிச் செல்வதைக் கண்

டதால், அவற்றின் மீள் வலியைப் பற்றியும் அவர்கள் சிறிது அறியலாயினர்.

முதலில் உண்டாக்கப்பட்ட கற்கருவிகள் பொதுவாக எல்லா வேலைகளுக்கும் பயன் பட்டன. காலாந்திரத்தில், தோண்டுதல்-குடைதல்-வெட்டுதல்-இழைத்தல்—எறிதல்-குத்துதல்-செதுக்கல்-இன்னோரன்ன பல்வேறான வினைகளுக்குத் தக்கவாறு, தனித் தனித் தன்மையான சிறப்பியற் கருவிகளையும் உண்டாக்க அம் மக்களால் முடிந்தது. 'அவ்வாறு, குறித்த முறையில் கல்லாயுதங் களைச் செய்யும் விசேட அறிவிலும், பண்டை மக்கள் தேர்ச்சி யடைந்தனர். இவ்வறிவே, தற்காலத்தவர்க்கு இன்றியமையாத வையாயுள்ள கருவிகள் பலவற்றிற்கும் அடிகோலியது எனலாம். எனவே, அது, 'விஞ்ஞானத் தளிர்' எனலாம்.

பண்டை மக்கள் விஞ்ஞானத்திற்கு அடிப்படையான பெருஞ் சாதனம் மற்றொன்றையும் கண்டு பிடித்தனர். அது, தீயைக் கண்டு பிடித்து, அத்தீயைக் கட்டுளடங்கச் செய்தது, என்பது. நெருப்பை வேண்டும்போது மூட்டவும், தேவை யில்லாதபோது அணைத்து விடவும் அறிந்தபோது, விஞ்ஞானக் கொழுந்து முளைத்தது எனலாம். மிகப் பண்டைக் காலத்தே, இவ்வரும் அறிவை மக்கள் பெற்றனர் என்பதைக் காட்டும் சின்னங்கள் பலவற்றை, மக்கள் உற்பத்தி நூலறிஞர் கண்டுபிடித் துள்ளனர்.

தீயின் தன்மையைக் கண்டு, அதைத் தம் ஆதீனத்துக் குட் படுமாறு முதன் முதலாய்ச் செய்த மக்களின் துணிவும் அறிவும் மிகவும் வியக்கத் தக்கதே. இயற்கையாய் எரியும் பெரும் காட்டுத் தீக்களையும், எரிமலைகளையும் அவர் கண்டனர். ஆனால், முதலில் அவற்றை அணுகத் துணிந்திரார். நிலத்தின் கீழுள்ள எரி வாயுக்கள் சில தாமே வெளிப்பட்டு, மின்னலினின்று கிடைத்த சூட்டால் மூட்டப்பட்டு, தணல்களாய் எரிவதுண்டு. அவை, காட்டுத் தீக்களையும் எரிமலைகளையும் போன்று, அத்துணை பயங் கரமானவை யன்று. மக்கள், முதன் முதலில், எரிவாயுக்களின் தணலை அணுகி, ஆராய்ந்திருக்க வேண்டும். கிட்டச் சென்று பார்த்தபோது, பக்கத்திலுள்ள சுள்ளிகள் முதலானவையும் தணலிற்பட்டு எரிவதைக் கண்டிருக்கலாம். அதைக் கண்டு, அவர், தாமும் நீண்ட கழியை யெடுத்து, ஒரு நுனியைக் கையில் பிடித்துக்கொண்டு, மற்றோர் நுனியை நெருப்பிலிட்டு, அந்நுனி தீப்பற்றிய பின், கொழுந்து விட்டெரியும் கழிகளை வேற்றிடங்களுக் குத் தூக்கிச் சென்றிருக்கலாம். ஆங்கு, அத் தீவட்டிகளை மற்றோர்க் குக் காண்பித்து வியப்பூட்டி, ஆங்காங்கே தீயை மூட்டினர் என எண்ண இடமுண்டு. சிக்கிமுக்கிக் கற்களை மோதியும், உரமான கழிகளை உராய்ந்தும், தாமே தீயை உண்டாக்குதற்கு, மிகவும் பிற்காலத்து மக்களே அறிந்தனர் எனலாம். பல மக்களிடையும் பரவியுள்ள சடங்குகளில் தீயை அவியாது காப்பாற்றி வருதல் ஒரு முக்கியமான அமிசமா யிருப்பதே மேற்கூறிய கருத்திற்கு

ஆதாரமாம். இயற்கையாய் உண்டான தீயினின்று பெற்ற தணலை அணையாது காத்தலே, அச்சடங்குகளின் அடிப்படையான நோக்கம். ஏனெனில் தீயணைந்து விட்டால், வெகுதூரம் சென்றே வேறு தீயைப் பெறவேண்டும்; தற்செயலாய் எழும் தணலுக்குக் காத்திருக்க வேண்டியிருக்கும்.

தீயைத் தம் ஆட்சிக் குட்படுத்தினது, மக்களின் இரண்டாவது அரும் பெரும் செயல் எனலாம். முதலாவது அரும் பெரும் செயல், கருவிகள் ஆக்கினது. இயற்கையில் பிரசன்னமாகும் தீக் காட்சிகளில் காட்டுத்தீயே முதன்மையானது. காடுகள் தீப் பற்றி யெரிதலைப் பார்த்தல், பூகம்பத்தைவிட அதிகமான நடுக்கத்தை விளைவிக்கின்றது. இயற்கையில் மற்றோர் வகையான பயங்கரத் தீக்காட்சியும் உண்டு. அது, மின்னலுடன் இடி இடிக்கும்போது விளங்குவது. அக்காட்சி, காட்டுத்தீயை விட அதிகமாய்த் திடுக்கிடச் செய்யும் நிகழ்ச்சி. அவ்வாறான மகத்தான மண்டலத் தோற்றங்களைக் கண்டு, அஞ்சாது, அணுகி அவற்றையும் தமக்குப் பயனுறுமாறு செய்ய எண்ணும் மக்கள் அஞ்சா நெஞ்சு படைத்த அரும் வீரரே யாவர். தாமெய்திய அற்புத வெற்றியால், மக்கள் உளப்பான்மையிலேயே பெரும் புரட்சி ஏற்பட்டது. இயற்கையைக் கண்டு அஞ்சாது, அதைக் கொண்டு தம் பணியாற்றும் துணிவை மக்கள் மனத்திலூட்டியது, தீயின் மீது அவர் பெற்ற வெற்றியேயாம். அதனால் எழுந்த வினையியல் வினைகளும் முக்கியமானவையே. அவ் வெற்றியாலேயே, மக்கள், மற்ற விலங்குகளைவிட மேலானவர் என்றதை நிலை நாட்டினர்.

மக்கள், தீயைத் தம் ஆட்சிக் குட்படச் செய்தலால், தம்மைச் சூழ்ந்த பலவற்றை அடக்கியாளும் வன்மையைப் பெருக்க இயன்றது. குளிரை விலக்கி, எங்கும் வெப்பத்தை அடைய முடிந்தது. அதனால், குளிர்ப் பிரதேசங்களிலும் குடியேறி, குளிரால் துயர் படாது வாழ முடிந்தது. தீமூட்டி உணவைச் சமைத்து அருந்த மக்கள் முற்பட்டனர். அதனால், தாம் உண்ணுதற் கேற்ற உணவுப் பொருள்களைப் பன்மடங்கு அதிகமாக்கிக்கொள்ள இயன்றது. பச்சையாய் உட்கொள்ள முடியாத பலவற்றைத் தீயி னுதவியால் சமைத்து உண்ண முடிந்தது. தணல் தந்த ஒளியைக்கொண்டு, மக்கள் இருட்டைப் போக்கி. இரவிலும் பயனுறு பணிகளில் ஈடுபடலாயினர். குளிர் மிக்க இருண்ட குகைகளும், தீயில் வெப்பமாக்கப்பட்டு, வெளிச்சம் நிறைந்த நல்லிருப்பிடங்க ளாயின. தீவட்டிகளைக் காட்டிப் பயமுறுத்தி விலங்குகளை விரட்டி யோட்ட முடிந்தது. விலங்குகள் நெருப்பைக் கண்டு அஞ்சிப் பதுங்கும் இயல்புடனேயே இன்றும் இருக்கின்றன. தீயைத் தம் வயப் படுத்தி, மக்கள், விலங்குகளினின்று வேறான இனத்தவர் தாம் எனும் பெருமையை விளக்கினர்.

தீயின் தன்மைகளைப்பற்றி அறிந்ததால், மக்களது எண்ணங்கள் புது வழிகளில் புகுந்தன. தீயால் விளைந்த மாற்றங்களைக் கவனித்தலினின்றே, இப்பொழுது நாம் இயைபு நூல் எனக் குறிப்

பிடும் அறிவியல் நூல் ஆரம்ப மாயிற்று. சரித்திர காலத்தி னின்று, இயைபு நூல் தீயின் விளைவுடன் இணைந்து வந்துள்ளது. நெருப்பால் பொருள்களில் நேரிடும் மாற்றங்கள், நெஞ்சி லுறைக் கும் தன்மை யானவை. தண்ணீர் சூடேறியபோது கொதிக்கின் றது. மரக்கறியும் இறைச்சியும் சூட்டில் வேகப்படுவதால் மென் மையையும் சுவையையும் பெறுகின்றன. மரக்கட்டைகள் எரிந்து கரியும் சாம்பலுமாய் ஆகின்றன. தீ யுறைவதால் கற்கள் வெடிக் கின்றன; களிமண் சுடப்படுவதால் செங்கல்லாகின்றது. இவற்றை யெல்லாம் சிறிது சிறிதாய்க் கண்டுபிடித்து வந்த ஆரம்பகாலத்து மக்களது பொருள்பாற் பட்ட அறிவு, பெருக்க மடைந்தது.

நெருப்பைச் செயற்கையால் தோற்றுவிக்கும் வகை, மிகவும் பிற்காலத்திலேயே கண்டு பிடிக்கப்பட்டது என முன்பே கூறி யுள்ளோம். செயற்கை முறையால் தீயை விளைவித்தற்கு முதன் முதலாய்ப் பயன்பட்டது. தீக்கல் எனப்படும் அயக்கந்தகமே யாம். அதைக் கல்லில் மோதும்போது, தீப்பொறிகள் பறக்கின்றன. எளிதில் தீப் பற்றக்கூடிய பொருள்கள் மீது அச் சுடர்கள் படும் படி செய்தால், அப் பொருள்கள் தீப்பற்றி யெரிகின்றன. மற் றோர் வகையில், முருக்கான இரு கழிகளை உராய்ந்து தீயை யுண் டாக்க, மக்கள் அறிந்தனர். வேறு சிலர், மூங்கிற் குழாயொன்றி னுள் அடைபட்டுள்ள காற்றைச் சடாரென அமுக்குவதால், சூட்டை யுண்டாக்கக் கற்றனர். இவ்வாறு, பல்வேறு வழிகளில் தீயை யுண்டாக்க மக்கள் தெரிந்து கொண்டனர். செயற்கை முறையால் தீயைப் பெறப் பல வழிகள் இருத்தலால், அவை கண்டு பிடிக்கப்பட்ட காலத்தில் உலகின் பல பாகங்களிலும், மக் கள் சிதறிப் பரவி யிருந்தனர் எனக் கொள்ளலாம் என்று மக்கள் உற்பத்தி நூலறிஞர் உரைக்கின்றனர். ஏனென்றால், மக்கள் ஒரே யிடத்திலிருந்தபோதே, மேற்கூறிய பல வழிகளும் கண்டு பிடிக் கப்பட்டிருந்தால், அவர்கள் பல்வேறு பாகங்களுக்குச் சென்ற போது அவ் வழிகள் எல்லாவற்றையும் அறிந்திருப்பர். ஆத லின், உலகின் பல்வேறு பாகங்களிலும் அவ்வழிகள் எல்லாம் கையாளப்பட்ட சின்னங்கள் அகப்பட வேண்டும். அவ்வாறின்றி, ஒரு பாகத்தில் ஒரு வழியால் தீ யேற்பட்டதற்கான சின்னங்கள் மட்டுமே காணப்படுகின்றன. மற்றோர் பாகத்தில் மற்றோர் வழி யாய் தீ யெழுந்ததற்கான அறிகுறிகள் உள்ளன. எனவே, தீயைச் செயற்கை முறையால் பெற அறிந்த காலத்தில், உலகின் பல பாகங்களில் மக்கள் சிதறிப் பரவி யிருந்தனர் என ஏற்படுகின் றது. இவ்வாறு மக்கள் பிற்காலத்திலேயே பிரிந்து சென்றிருக்க வேண்டும். எனவே, செயற்கை முறையை யொட்டித் தீ யுண் டாக்கும் வழிகள் பிற் காலத்திலேயே கண்டு பிடிக்கப்பட்டிருக்க் வேண்டும் என்ற முடிவை மக்கள் உற்பத்தி நூலறிஞர் அடைந்த னர்.

இயற்கையினின்று நேரே பெற்ற தீயை அவிந்து விடாது காப்பாற்றும் நிலையினின்று நீங்கி, தம் செயலாலேயே தீப்பொறி கள் எழச் செய்யும் திறனை மக்கள் பெற்றனர். அப்பொழுது,

அவர்கள்தம் 'உண்டாக்க வல்லோம்' எனும் உணர்ச்சி ததும்பி மேலிடலாயிற்று. எப்பொழுதும் இயல்பாய்த் தம்மைச் சூழ்ந்திருந்தவற்றினின்று, வேறுபட்ட தானதும், வன்மை பொதிந்த வசீகரத் தோற்றமானதும் ஆன ஒன்றை, தாம் விரும்பியபோது விளைவிக்கும் திறனை மக்கள் பெற்றனர். இக் கல்லையும் சிக்கி முக்கிக் கல்லையும் தட்டி யடித்து, பொறிபறக்கச் செய்தல், இன்மையினின்று இருக்கு மொன்றை இலங்கச் செய்தல் போலுள்ளது. இதைக் கண்ட ஆரம்பகாலத்து மக்கள் மனத்தில் உற்சாகம் பொங்கியது. அவரது ஆக்கம் திறன் பாற்பட்ட உணர்ச்சி உயர்ச்சி யடைந்தது.

விஞ்ஞான மனப்பாங்கு மக்களியல்புடன் என்றும் தொடர்பு கொண்டுள்ளது என்பதைத் துலக்கிய அரும்பெருஞ் செயல்களில் இரண்டாவதானது, தீயை விளைவிக்கவும் அடக்கவும் மக்கள் அறிந்ததே யாம். அதன் விளைவுகள் வாழ்க்கையின் பல துறைகளிலும் விரவி, சமூக வியலுடன் தொடர்பைக் கொள்ளலாயின. சமையல் வேலை, குசத்தொழில், உலோக வேலை என்ற மூன்றும் நெருப்பின் விளைவாய்த் தோன்றிய தொழின் முறைகளாம். சமையல்வேலை, எதையும் ஊன்றிப் பார்க்கும் பான்மையையும், கவன சக்தியையும் பயிற்றுவிக்கின்றது; சுவை யுணர்ச்சியையும் வளர்க்கின்றது. ஆகையால், ஆரம்ப காலத்து மக்களின் குரூர சுபாவத்தைச் சிறிது தணித்து, அவர்களின் கனிவைப் பெருக்குதற்கு, சமையல் செய்யப்பட்ட நல்லூண் உற்ற துணை நல்கிற்று. மேலும், தீயின்த துணையால், மக்கள் உலகின் பாகங்கள் எல்லாவற்றினும் வாழ இயன்றது; ஓரிடத்திலேயும் நிலையான வாழ்க்கை நிறுவதற்கும் தீயே துணையா யிருந்தது. ஏனெனின், வசதியான கிடைத்த பின், அதைத் தம் இருப்பிடமாக்கி, அங்கே நிலையான இல்லங்கள் கட்டி நல்வாழ்க்கை நடாத்துதற்காக இல்லற வாழ்க்கைக்குக் காரணமான பலவற்றிற்கும் தீயே முதற்காரணமா யுள்ளது. இவ்வாறான நல் வாழ்க்கையின் பலனாய், மக்கள் தொகை மேலும் அதிகரித்தது. ஆதலின், பல மக்கள் கூடி வாழ்ந்த சமூகங்களும், சுவற்றிற்கான சம்பிரதாயங்களும் ஏற்பட்டன. மேலும் மேலும் மக்கள் தொகை பெருக்க மடைந்ததால், சமூகத்தின்பாற்பட்ட பின்னல்கள் அதிகரித்துள்ளன.

சூட்டினின் றெழுந்த நடைமுதல் விளைவுகள், ஒரு புற மிருக்க, அதனால் எழுந்த அறிவியல் பெருக்கமும் அதிகமா யுள்ளது. கற்கள் உராய்வதாலும், காற்று சடுதியில் அமுக்கப்படுவதாலும், ஏன் சூடு விளையவேண்டும் என்ற வினா எழுந்தது. இதற்கு விடை பெறும் முகத்தான், விதியியலான விஞ்ஞானம் பெரிதும் முன்னேற்ற மடைந்தது. அவ் வினாவிற்கு விடை பெறுதற்கு சிந்தனையின் பாற்பட்ட அறிவு இன்றியமையாதது. ஆதலின், அவ்வழியே சிந்தனை முதிர்ந்தது. பல காலங்களில் வாழ்ந்த பல்லோரான அறிஞரின் ஆழ்ந்த சிந்தனையின் வினைவாய், அவ் வினாவிற்கு விடை ஒருவாறு பெறப்பட்டது. அது, 'சூட்டின் இயக்கவியல் கொள்கை', 'சூட்டியக்க விதிகள்' எனத் தற்கால பௌளதிக

# சிற்பி அடைந்த பரிசு

(J. V. இராமானுஜம்)

அவன் உலகறிந்த சிற்பி. பள்ளியில் பணங் கொடுத்துப் படித்துப் பட்டம் பெற்றவனல்ல. அந்நிய நாடு சென்று அறிவடைந்தவனல்ல; பின் எங்ஙனம் சிற்பியானுன்? வழி வழி வளர்ந்து வந்த அந்தச் சிற்றுளியும் சுத்தியும் அவனைச் சிறந்த சிற்பியாக்கிவிட்டன.

சிற்றுளியும் சுத்தியும் அவனுடைய ஜீவநாடிகள், உயிர்த் தோழர்கள், மற்றும் சுற்றமெல்லாம் அவைகளே! சிற்பம் வடிக்கும் பொழுது உண்டாகும் சிற்றுளியின் ஒலியே அவன் கேட்கும் இசை இன்பம்! சித்திரம் செதுக்குகையில் சிதறும் சிறு சிறு கற்றூள்களே அவன் கண்ட பொற்புதையல்கள்!

அவனுடைய கைப்பட்ட இடமெல்லாம், கற்பனையின் கருங் கோடுகள்! உளிபட்ட இடமெல்லாம் உயிர்த்தெழும் ஓவியங்கள்! ஆ! இந்த இருபத்தைந்து வயதிற்குள் அவன் செதுக்கிய சித்திரங்கள் எத்துணை? சிருஷ்டித்த சிற்பங்கள் எத்துணை? எண்ணிலடங்கா!

* * *

"சோறுடைத்தான சோழவள நாட்டிலே" அவன் பிறந்தான். ஆனல் வளரவில்லை! அவன் பிறந்த காலத்தில் அந்நாட்டில் பெரிய பஞ்சம். பஞ்சத்தால் பசி மிகுந்த சிற்பிகள் பாண்டிய நாடு புகுந்து அரசனை அவைக்களத்தில் கண்டனர்.

"பாண்டிய வேந்தே! வணக்கம்! நாங்கள் தங்கள் அடைக்கலம்!"

பாண்டியன்:—காப்பாற்றப்பட்டீர்கள்! நீங்கள் யார்? உங்களுக்கு என்ன நேர்ந்தது?

சிற்பிகள்:—அரசே! நாங்கள் சோழவள நாட்டுச் சிற்பிகள். அச்சோழநாடு எங்களுக்குச் சோறளிக்கவில்லை. அந்நாட்டில் அத்துணைப் பஞ்சம்! ஊணும் உறக்கமுங் கொண்டு பல நாட்களாயின!

பாண்:—சிற்பிகளே! வருந்தாதீர்கள். விரைவில் உங்கள் கவலை நீக்கப்படும்! மடைப்பள்ளிக்குச் சென்று பசிதீர்த்துக் கொள்ளுங்கள்! மற்றவை பின்னர் பேசிக்கொள்ளலாம். (செல்லும் சிற்பிகள் தயங்குகின்றனர்.)

---

விஞ்ஞான நூலில் சிறப்புற்றுள்ளது. ஆனல், வினவிற்கு முழுமையான விடை இன்னும் பெறப்படவில்லை. மேலும், மேலும் அதைப்பற்றி இன்றும் விஞ்ஞானிகள் ஆராய்ச்சிகள் செய்து கொண்டுள்ளனர். பண்டு மூண்ட அறிவுத்தீ என்றும் குன்றாது வளரும் வண்ணமாயுள்ளது.

பாண்டி:— ஏன் தயக்கம்?

சிற்பிகள்:—அரசே! சமுகத்திற்கு ஒரு சிறு விண்ணப்பம்!

பாண்டி:—எ...ன்...ன...!

சிற்பிகள்:—இதோ! இக்குழந்தை!.........! சோழ அவைக் களத்தின் ஆஸ்தான சிற்பியின் மகன்! அங்கு ஏற்பட்ட பஞ்சத்திலே தன் பெற்றோரைப் பறிகொடுத்தான். இக்குழந்தையை யாங்கள் வளர்க்க வழியறியோம்!

கொற்றவன் குழந்தையைக் கூர்ந்து கவனித்தான். குழந்தையின் முகத்தில் மாசற்ற சிற்பக் கலையின் சிறப்புகளெல்லாம் ஒளி விட்டுப் பிரகாசித்துக்கொண் டிருந்தன. மன்னவனின் முகம் மலர்ந்தது.

"நீங்கள் இனி செல்லலாம்! குழந்தையின் வளர்ப்பைப் பற்றிக் கவலையுற வேண்டியதில்லை" என அவர்களை அனுப்பி விட்டு, அரசன் அமைச்சனை விளித்தான்.

"மந்திரீ! இக்குழந்தையை வளர்ப்பது நமது கடமை? இதற்குத் தக்க ஏற்பாடு செய்க!"

மந்திரி:—அரசே! உத்தரவு!

இச்சம்பவம் நடந்து இருபத்தைந்து ஆண்டுகள் ஆகிவிட்டன. இப்பொழுது அவன்தான் பாண்டிய அவைக்களத்தில் ஆஸ்தான சிற்பி.

## 2

**மா**லை நேரம். "லொட், லொட்" என்று சிற்பி மீனாட்சி அம்மையின் படிமத்தை வடித்துக் கொண்டிருந்தான். அவனுடைய கருத்தெல்லாம் கற்பனையின் ஆழத்தின் அடியிலே அமிழ்ந்து கிடந்தன. அவனுடைய உளியும் வெளியுலகில் சஞ்சரிப்பதாகத் தெரியவில்லை. இப்படி சில விநாடிகள் ஓடிவிட்டன. சிற்பி தலை நிமிர்ந்தான். ஆ! அவன் முகத்தில் என்ன ஒளி! உதட்டிலே என்ன முறுவல்! ஏன்? அம்மையின் படிமம் அவ்வளவு அழகாய் அமைந்திருந்தது.

சிற்பி ஐந்தாறடி பின் சென்றான். அங்கயற்கண்ணியின் அழகொழுகும் திருமேனியை நோக்கினான். கண்ணால் அளந்தான். கருத்தால் நினைந்தான். "என்ன அழகான உருவம்...! ஏ! ஓவியத் தெய்வமே!! இஃது என்னிடத்திலிருந்தா முகிழ்த்தது!" என அவனது உதடுகள் உறவாடிக் கூறின. மனம் மௌனத்தில் அடங்கியது.

* * *

"உடுக்கும் புவனங் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்த்திருக்கும் **உயிர் ஓவியமே......!"**

என்று காற்றில் மிதந்து வந்த இன்னிசை சிற்பியினுடைய மௌனத்தின் ஆணி வேரை அறுத்துவிட்டது. சிற்பி திடுக்

இட்டுத் திரும்பிப் பார்த்தான். ஆ! என்ன ஆச்சரியம்? அவனுடைய பின் பக்கத்திலும் இன்னொரு சிற்பம்! வியப்பினால் விரிந்த கண்களால் சுற்று முற்றும் பார்த்தான்.

இரு சிற்பங்களையும் மாறி மாறிப் பார்த்தான். ஒன்றும் விளங்கவில்லை.

"நன்றாய்ப் பாருங்கள்! கண்களைத் துடைத்துக் கொண்டு பாருங்கள்!!" என்றது பின்புறச் சிற்பம்.

"என்ன! கண்களைத் துடைத்துக் கொண்டு பார்ப்பதா!" என்று வாய்விட்டுக் கூறினான்.........அப்புறம்......மறு கணம்... "........மீனா!......நீயா......! என்னை ஏமாற்றிவிட்டாயே!" என்றான் தழுதழுத்த குரலில். அவன் கண்கள் ஆச்சரியத்தைக் கக்கின.

"நானா ஏமாற்றினேன்?......இல்லை! உங்கள் கண்கள்தான் உங்களை ஏமாற்றிவிட்டன!" என்றாள் மீனா.

* * *

மீனா பாண்டியனின் ஒரே மகள். சிற்பியுடன் வளர்ந்துவரும் செல்வி பிரமதேவன் தொழிற்சாலையில் நன்றாய்க் கடைந்தெடுக்கப்பட்ட "அழகமுதம்." அந்த மாலைச் சூரியன் தன் பொற்கிரணங்களால் அவளை மெருகிட்டு அழகு பார்த்துக் கொண்டிருக்கும் போதுதான் மீனா சிற்பியின் கண்களுக்குச் சிற்பமாகத் தோன்றினாள்.

* * *

"மீனா!......எங்கே?......இவ்வளவு...தூரம்...!" என ஆர்வம் வழியும் முகத்தோடு கேட்டான் அவன்......! "அந்திப் பொழுதில்......! ஒரு...சிற்றுலா...!" என்றாள் அவள்.

சிற்பி:—இருக்கட்டும்...! நமது அம்மையின் உருவம் எங்ஙனம் அமைந்திருக்கிறது?

மீனா:—கேட்க வேண்டுமா என்ன! உலக அழகெல்லாம் ஒன்று திரண்டாற்போலத்தான்!...சரி! இந்தப் படிமத்திற்காக அரசர் தங்களுக்கு அருளும் பரிசென்ன?

சிற்பி:—பரிசு! என்ன பரிசு வேண்டியிருக்கிறது? உங்கள் உப்பைத் தின்று வளரும் இந்த அடிமைக்கு......!

மீனா:—அடிமையா......! யார் உங்களை அப்படிச் சொன்னது? நான் தான்......! தங்களின் சிற்பச் செல்விக்கு...! உங்கள் கற்பனையின் கருங்கோட்டிற்கு......!......உயிர்த்தெழும் ஓவியத்திற்கு...அடிமையாயிற்றே...! அப்படி இருக்கையில் என்ன இப்படிப் பேசுகிறீர்கள்...!

சிற்பி:—கண்ணே...! நீ உலகியல் அறியாது உரைக்கின்றாய்......!......இருந்தாலும்......! பாண்டிய நாடுதான் "முத்தத்தில்" மிதக்கின்றதே...!...பரிசிற்கென்ன குறைவு......!

மீனு:—ஆம்...! உண்மைதான்...? ஆனாலும் அரசர் கொடுப்பது...விலையுள்ள...துளையுள்ள...முத்தங்கள்...! இந்த அடிமை கொடுப்பது......விலையில்லாத....துளையில்லாத......முத்தங்களை முன்னமேயே பெற்றுக் கொள்ளுங்கள் !

"இச்...இச்...இச்......!"

அந்த நான்கு இதழ்களும் துடித்துக் கொண்டிருந்தன. ஆ! என்ன சுகம்! என்ன இன்பம்! ஆனால் இச்சிறு இன்பத்தையும் அச்சிற்பி கொடுத்து வைக்க வில்லை.

"வீச்" என்று மறுகணமே இன்னொரு சப்தம். சிற்பியின் தலை பூமியில் வீழ்ந்து துடித்தது.

உதிரம் ஒழுகும் உருவத்தோடு மீனு திடுக்கிட்டுத் திரும்பினாள். அவளின் கைகள் சிற்பியின் தலையைத் தழுவிக்கொண்டு தான் இருந்தன.

இரத்தம் கக்கும் வாளோடும், நெருப்பைச் சொரியும் கண்களோடும் பாண்டியன் நின்றுகொண்டிருந்தான். "சிற்பனா......? அற்பன்...! உண்ட வீட்டிற்கு இரண்டகம் செய்த நாய்" என்று அவனது வாய் கூறிக்கொண்டிருந்தது.

"அப்பா...!" என்றாள் அவள்.

"சீ! காமப் பித்தே!" என்று உறுமினான் மன்னன். அவனுடைய சொற்கள் சினத்தின் சிகரத்தை எட்டின.

இதைக் கேட்டு அசைவற்று நின்று விட்டாள் அவள். உள்ளம் துடித்துக் கொண்டிருந்தது. கண்கள் கார்கால மாயின. "காமப்பித்து !"......... என்று அவள் உதடுகள் உளறிக் கொண்டிருந்தன. சிறிது நேரம் சென்றது. காமப்பித்தல்ல......! கலைப் பித்து......என்று கூறுங்கள். அதுதான் இங்...ங...ம...ம்!" என்றாள் மீனு ஈனசுரத்துடன்.

"பாண்டிய குலத்திற்குப் பழிச்சொல் தேடிய பாவி......! வாயை.........மூடு !...எல்லாம்........." என்றான் பாண்டியன் கோபத்தோடு.

"ஆம்!......எல்லாம்.......வினையின்........விளையாட்டு !....விதியின்...பயன் !.. அப்பா ! என்னை மன்னித்து விடுங்கள் !" என்று மீனு மன்னனின் கால்களைப் பிடித்தாள்.

"மன்னிப்பா......! அதோ ! அந்த...கூட்டிக் கொடுக்கும் கற்சிலையிடம் போய்க் கேள் !" என்று உதைத்துத் தள்ளினான் தென்னவன்.

கலைந்த உருவோடும், குலைந்த உள்ளத்தோடும் மீனு மெதுவாக எழுந்தாள். இடக்கையால் சிற்பியின் தலையைத் தழுவிக் கொண்டு, வலக்கையால் அவனது உடலை இழுத்து மீனாட்சி அம்மையின் அடியிணையில் அமைத்தாள்.

அவள் கரங்கள் சிரமீது குவிந்தன. கணகள் நீரைக் கொட்டின. மொழிகள் உள்ளத்திலிருந்து வெளி வந்தன.

"எல்லாம் நீ அறிவாய்! இப்பொழுது நான் ஒரு அபலை ஆகி விட்டேன். இப் பரந்த உலகிலே உன்னைத் தவிர எனக்கு வேறு களைகண் காணேன். நான் இவரை ஏன் காதலித்தேன்? உடன் உண்டு உடன் வளர்ந்தனர் என்றா? சோழநாட்டின் சுடர் என்றா? இல்லை! அவரின் அன்பு ஒழுகும் வார்த்தைகளுக்கு! அருளொழுகும் திரு நோக்கிற்கு! சிற்பம் செதுக்கும் செவ்விக்கு! அவருடைய வழி வழி வளர்ந்த கற்பனையின் விதைகளுக்கு! இஃதறியாமல் என்னை எந்தை கோபித்தனரே!.........அந்தோ!

"காமப்பித்து".........என்று என்னைக் கடிந்து கொண்டார்ரே! நான் அப்படிப்பட்டவளா? இந்த உண்மையை நீ அவருக்கு எடுத்துக்காட்டி அவருடைய கோபத்தை அடக்க மாட்டாயோ.........!

"பாண்டிய குலத்தின் பழிச்சொல்"......என்ன...கொடுமையான வார்த்தை......! கலைச் செல்வத்திற்காக என் காதற் செல்வத்தையு மன்றோ இழந்தேன்......! ஆ......! என்னே எனக்குக் கிடைத்த பட்டம்......!.........! என்னே அரசரின் ஆற்றொணாக் கோபம்......! இத்தகைய கோபத்தாலன்றோ அன்று ஓர் * காவியப் புலவனுக்கும் இக்கதி நேர்ந்தது......! ஐயோ......!

"மன்னர் கூறியபடி உன்னிடமே மன்னிப்பு கேட்டுக் கொள்ளுகின்றேன்......எல்லாக் குற்றங்களும் என்னுடையதே...! இதை நான் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளுகிறேன்......! என்னை மன்னித்து விடு.........!

"கடைசியாக இரண்டு வரங்கள் உன்னிடம் வேண்டுகின்றேன். அருள் கூர்ந்து அவற்றை அளித்தல் வேண்டும். "தமிழ்" வேறு நீ வேறு என்று நினைத்து, "கூட்டிக் கொடுத்த சிலை" என்று என் தந்தை அறியாமற் சொன்ன சொல்லுக்கு ஒரு மன்னிப்பும், இப்பிறப்பில் இவர் எனக்குக் கணவர் ஆகாவிடினும், மறு பிறப்பிலாவது கணவராகும் பெறும் பாக்கியமும் அருள வேண்டுகின்றேன். இதைத் தவிர இந்த ஏழை வேண்டுவது இன்னும் என்ன இருக்கிறது......! எல்லாப் பிழைகளையும் மன்னிப்பாய்...! இதுதான் பாண்டிய அரசின் கடைசி வணக்கம்!.........வணக்கம்!"

என்று மீண்டு சிற்பியின் உடலைத் தழுவினாள்......ஆ...! அவ்வளவுதான். அவளும்...அவன்...வழியே...சென்று...விட்டாள்...!

* * * *

கற்சிலையும் கண்ணீர் விடும் இக்காட்சிகளைக் கண்டு கொண்டிருந்தும் மன்னன் மரம்போல் நின்றான். என்னே.........அவனின்.........மதி!

---

* அம்பிகாபதி.

# கம்பர் கவிகளில் இடைச்செருகலா?

(மா. வே. தேவராசன்)



திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் **B. A., B. L.,** அவர்கள் மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா என்பது ஒப்ப, தாம் பிடித்த முயலுக்கு மூன்று காலே தான் எனச் சாதித்து வருவதைப் பார்க்கப் பகுத்தறிவாளர்களின் மனம் புண்ணுகவே செய்கிறது.

முதலியாரவர்கள், புகழ்க்கம்பன் வாய் மலரில் பிறந்த வாசகத்தேனைச் சொட்டுச் சொட்டாகச் சுவைத்துப் பார்த்து இனிக்கும் தேனை மட்டும் எடுத்துக் கொண்டு சற்றுப் புளிக்கும் கள்ளை வீசி யெறிகின்றனர். இம் முறையில் வரவேற்க வேண்டிய பகுதியும் ஒன்று உண்டு. "கம்பராமாயணம்போல விரிகிறதே!" என்று இனி நாம் வெறுப்புற்றுச் சொல்லாதவாறு, கம்பராமாயணத்தை மிகக் கையடக்கமாகச் சுருக்கி வருகின்றனர். இம்முறை—நம் நாட்டுப் புலவர்கள் [பாரதத்தில் நல்லாப் பிள்ளையும், சீவகசிந்தாமணியில் கந்தியார் எனும் அடிகளும், தேவாரத் திருப்பதிகங்களில், வெள்ளியாரும் பல் நூற்றுக்கணக்கான பாடல்களைப் பாடிச் சேர்த்த] முறைக்கு முற்றிலும் மாருக, பாட்டுக்களைப் பிடுங்கி எறியும் வேலையில் சேர்த்திருக்கிருர். இம்முறைக்கும் சு. ம. காரர்கள் நூலையே எரிக்கும் முறைக்கும் பெரிதும் வேறுபாடு இல்லை. கிடக்க. பால காண்டம் 1420ம் அயோத்தியா காண்டம் 1212 பாவும் ஆக 2632 பாக்களில் கம்பர் பாடியதாக முதலியார் கண்ணுக்குத் தெரிவன 730 பாட்டுக்களேயாம். இதை நோக்கின், அந்த 730 பாக்களும் அவர் இயற்றியவையாகத்தான் கொள்ள இடமேது? ஒரு புலவர் எப்பொழுதும் நல்ல பாக்களையே பாடுவார் என்று எதிர் பார்ப்பது தவறு. நல்ல பாக்களை மட்டும் வேண்டுமானல் பொறுக்கி எடுத்துக் கொள்ளலாம். அன்றி (2632க்கு) 730 பாக்களை மட்டுமே கம்பர் எழுதியவை என்று கூறுவதும் அறிவுடைமை யன்று. அதற்குத் தக்க காரணமாகப் பாக்களில் காணப்படும் சுவையும் நடையுமே அமையா. ஏன்? பாரதிதாசன் அவர்கள் "முருகன் துதி யமுது" என்ற பாக்களைப் பாடிய அதே வாயால் இன்று நாத்திகப் பாடல்கள் பாடுகிருர். இதனல், முருகன் துதி யமுது பாரதிதாசன் பாடிய தல்ல என்று கூறுவது பெரும் புளுகாகும். எனவே, இத்தகைய தமிழ்ப் பாக்களைத் திருத்தித் தம் அறிவிற் கேற்ப அமைத்துக்கொண்டு பிரசுரம் செய்யும் முறை கண்டிக்கத் தக்க தாகும். இது நிற்க.

முதலியார் அவர்களைத் தமிழர்கள் பலர் வன்மையாகக் கண்டிப்பதாக அறிந்து, திரு. இராஜாஜி அவர்கள் தூக்கிப் பேசுகின்றனர். முதலியார் அவர்கள் பெரியவர் என்றும், வாழ்வில் பல இடையூறுகட்கு இடையில் தமிழ்த் தொண்டு செய்யும் அவர் மனதைப் புண்படுத்தக் கூடாது என்றும், பதிலாக அவரைப் போற்றி ஆதரிக்க வேண்டும் என்றும் வேண்டுகிருர். அவர் தம் வேண்டுகோள், "பெரியவரான ஒருவர் குற்றம் செய்து விட்டாலும் போற்றிக் கொள்ளவே வேண்டும்" என்ற கொள்கையை வற்புறுத்துவதுடன் தனிப்பட்ட ஒரு மனிதர் வாழ்க்கைக்கும் பொதுவுடைமையாகிய தமிழ்க்கும் தொடர்பு கற்பிப்பதும் பொருளற்ற வாதமே யாகிறது. எனவே டி. கே. சி. யின் முறையைத் தமிழன்பர்கள் கண்டிக்க வேண்டுவது இன்றி யமையாதது. அது நிற்க,

* * * *

முதலியார் தம் முத்தொள்ளாயிரப் பதிப்பு வெளியீட்டில், அவர் கண்ட இலக்கண முடிபே கையாளப்பட் டிருப்பதைக் காண வருந்தாமல் இருக்க முடியாது. அம்முறையைக் கையாளத் தொடங்கினால் தமிழில் சொற்கள் பல திரிய வேண்டியுள. எடுத்துக் காட்டாக ஒன்று.

"நல்த்தாமரைக் கயத்தில் நல்லன்னம் சேர்ந்தால்ப்போல்க்
கல்த்தாரைக் கல்த்தாரே காமுறுவர்—கல்ப்பிலா
........................முது காட்டில்க்..........."

கற்பு = கல்ப்பு ஆகவும், சொற்கள் = சொல்க்கள் ஆகவும், கற்றல் = கல்த்தல் ஆகவும், நட்பு = நள்ப்பு ஆகவும், வெட்கம் = வெள்க்கம் ஆகவும், திரிந்து விகாரப்படுதல் காண்க.

எனவே திரு. முதலியாரவர்கள் முறை முற்றிலும், இலக்கண, இலக்கிய, மொழி இயல், அறிவியல் முறைக் கெல்லாம் மாறானதா யிருப்பதை உணர்ந்து மறுத்தொழிக்க வேண்டாவோ ?

இப் புணர்ச்சி, ல், ள் எழுத்தின் முன் **தகர முதல் மொழியில் மட்டுமே சில இடங்களிலே** மயக்கம் விளைக்கிறது. அதனால், இதற்கு ஒரு திருத்தம் செய்ய வேண்டுவது அவசியம். இத் திருத்தமும் ஆன்றோர்களே செய்து காட்டி யுள்ளனர். அஃதாவது இது, தொல் + காப்பியம் = தொற்காப்பியம் என்றாக வேண்டும். இன்றும் வழக்கு முறையிலும், பந்தல் + குடி = பந்தற்குடி என்றும், சாயல் + குடி = சாயற்குடி என்றும் புணரவேண்டி யிருந்தும், அவை முறையே தொல்காப்பியம் பந்தல்குடி சாயல்குடி என்றே வழங்குகின்றன. இவற்றை யெல்லாம் ஆராய்ந்து நடுநிலைமையோடு பார்த்தால், உண்மை விளங்கும். அவையாவன:—

1. திரு. T. K. C. எழுதும் முறை எப்படியும் ஏற்றுக் கொள்ளக் கூடியதல்ல. அவர் முறை சிறிதும் அறிவுக்குப் பொருந்தவில்லை.

2. பொருள் விளங்கும் வரையிலும் சொற்களைப் புணர்த்தி எழுதுவதில் குற்ற மில்லை.

3. பொருள் விளக்கம் வராது என்று தோன்றும் இடத்தில், புணர்ச்சிகளை நீக்கி தனித்தனிச் சொல்லாக இயல்பு புணர்ச்சியில் எழுதுவதுதான் சிறந்தது.

4. ல், ள் முன் வரும் தகர முதன் மொழிகளைக் கூடிய மட்டிலும் திரிக்காமலும், வருமொழி தகர ஒற்றை மிகுக்காமலும் இயல்பாகவே எழுத வேண்டும்.

5. ல், ள் முன் ஏனைய க, ச, ப, கார முதன் மொழிகளை வழக்கம் இலக்கண விதிப்படி எழுதலாம். தகார மொழியிலும், பொருள் விளங்குமிடம் புணர்த்தி எழுதுக.

சான்று:—(1) தொல்காப்பியம். (2) நற்றமிழ். (3) கட்குடம். (4) பெருமாள் தேவர். (5) கதிர்வேல் தலைவர். (6) நட்டல். என்பனபோல பொருள் விளங்குமாறு எழுதுவது நலம். இம்முறைக்கு அன்பர் முதலியார் என்ன தடை சொல்கின்றார் ?

---

# பதிலொலி

(" வீரசக்தி ")

**போ**னமாதம் "ஆனந்தபோதினி"யில், நண்பர் குழந்தைசாமி எழுப்பிவிட்ட "எதிரொலி"க்குப் 'பதிலொலி' யிடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. "இதற்குப் பதில் சொல்லித்தானுகவேண்டும்" என்று நண்பரே நிர்ப்பந்தப் படுத்தியதாக் நான் கொள்ளவில்லை. அவரின் நோக்கம்—அதாவது "கணேசனின் தாயார்" என்ற சிறு கதையைச் சித்திரித்ததின் நோக்கம்—தாயின் தியாக உள்ளத்தோடு வறுமையின் கொடுமையும் சேர்ந்ததினலே கணேசனின் தாயார் கற்பிழக்க நேரிட்டது—என்பதை எடுத்துக் காட்டவேதான் என்று "எதிரொலி"யிலிருந்து அறியக் கிடக்கின்றது. வறுமையின் கொடுமையை வற்புறுத்த அக்கதையின் முடிவை அவ்வாறு விபரீதத்திலே முடிக்க வேண்டிய அவசியமேயில்லை யென்பதே என் அபிப்பிராயம். வேறு விதமாக முடித்திருந்தால் வறுமையின் கொடுமையை இன்னும் உயர்வாக எடுத்துக்காட்டி யிருக்கலாம். அதுவே என்னைப் 'பதிலொலி' கிளப்ப நிர்ப்பந்தப் படுத்தியது என்றே நான் கொள்ளுகிறேன்.

"சிறு கதை யென்றால் என்ன ?" என்று கேட்கிறார் நண்பர். "வாழ்க்கையின் நிகழ்ச்சிகளை இலக்கிய ரூபமாக சித்திரிக்கும் சித்திரமே சிறு கதை" என்றுதான் நான் எண்ணுகிறேன். "அதை யார் எழுத வேண்டும் ?" என்கிறார். சிறிதாவது கற்பனு சக்தியும், அதை எடுத்தோவியமாய்த் தீட்டச் சக்தியும் பெற்றவர்களே எழுத வேண்டும் என்றால் அதில் குற்றமொன்றுமில்லை யென்பது என் அநுமானம். இந்த இரண்டு கேள்விகளும் அதின் பதிலும் இலகுவில் முடிந்தன. நண்பர் குழந்தைசாமி யவர்களும் ஏற்று கொள்ளுவார் என்றே நினைக்கிறேன்.

மூன்ருவது கேள்வியாக, "எதற்காக எழுத வேண்டும் ?" என்று கேட்கிறார். அவரின் 'எதிரொலி'யிலிருந்து "எதற்காக எழுத வேண்டும் ?" என்ற கேள்விக்கு, அவரின் பதில் இன்னதென சிறிது விளங்குகிறது. அவரின் நோக்கம் என்னுடைய பதிலுக்கு மாறுபடுகிறது என்றபோதுதான் என் மனம் வருந்துகிறது. "வாழ்க்கையில் என்ன நடக்கின்றதோ அதை அப்படியே சித்திரித்து விட்டு ஆசிரியன் விலகிவிட வேண்டும்" என்று அவரே கூறுகின்ருர். உலகத்தில் அவர் முன் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அநுபவ மிகுந்த நண்பரே நேரில் கண்டிருப்பார்.

நான்கணுவிற்குத் தன் உடலை விற்பதும்—ஒரு அணுவிற்கு ஒன்பது பொய் சொல்லுவதும்—தன் சகோதரிகளையும் சகோதரன் கூட்டிக் கொடுப்பதுவும்—முறை தவறிப் புணர்வதுமான சம்பவங்களையே எங்கும் காணலாம். இவற்றை அப்படியே சித்தி

ரித்து விட்டால் எப்படியிருக்கும் என்பதை நேயர்களே கற்பனை பண்ணிக் கொள்ளலாம். "உண்மைச் சம்பவம்" என்று, ஒரு பெண்மணி எழுதி யிருந்ததை நான் பார்த்தேன். தான் தண்ணீ ரெடுக்கச் சென்றதாகவும்—அங்கே சில முரடர்கள் தோன்றித் தன்னைத் தூக்கிக்கொண்டு போய் ஒரு மறைவான இடத்தில் என் னென்னமோ செய்ததாகவும்......என்று பலவிதமாக வருணித் திருக்கிறார். அக்கதை எத்தனையோ பெண்கள், "ஆஹா, நாம் மட்டும் இத்தவற்றைச் செய்து விடவில்லை—இதோ பகிரங்க மாகவே அது விளம்பரப் படுத்தப்பட் டிருக்கிறது" என்று ஆனந்தப் படவும் ஏதுவாகியிருக்கும் என்று நிச்சயமாக எண்ணு கிறேன். "உண்மைச் சம்பவத்தை" நமது நண்பர் கூறுகிறபடி அப்படியே சித்திரித்து விடுவதில் எவ்வளவு விபரீதம் ஏற்படுகிறது என்று நன்கு அறிந்து கொள்ளலாம்.

சொன்ன வாக்குப்படி பணம் செலுத்த தன் பெண்டு பிள்ளை யையும் விற்று சத்தியத்தை நிலை நிறுத்திய அரிச்சந்திரர்களும்—ஏகபத்தினி விரதங்கொண்ட இராமர்களும்—நானுவித இன்னல் களையும் சகித்துப் பொறுத்த தருமர்களுமா நம்முன் பெரும்பா லாக உலவுகின்றனர்? லக்ஷத்தில்—ஏன் கோடியில் ஒருவர் தான் அப்படிப்பட்டவராக இருக்க முடியும்! கோடியில் ஒருவரான, ஒரு அரிச்சந்திரனைப் பற்றி ஏன் அவ்வளவு பாடுபட்டு இலக்கிய ரூபமாக்கி உலகத்திற்கு அளித்தார்கள்? உலகத்தில் நடக்கும் வாழ்க்கைச் சித்திரங்களை அப்படியே வருணிக்க வேண்டும் என்று எண்ணி யிருந்தால் கோடியில் ஒருவரான அரிச்சந்திர னும், தருமனும், கண்ணகியும் நம்முன் தோன்ற கனவு கண்டிருக் கக்கூட முடியாது. பெரும்பாலாக நடக்கும் சம்பவங்களை அறவே புறக்கணித்து விட்டு, மிகவும் அபூர்வமான சம்பவத்தை மட்டும் அவர்கள் ஏன் இலக்கியத்திற்குக் கொணர்ந்தார்கள்? நம்முன்னே நடப்பவற்றை அப்படியே சித்திரித்திட வேண்டும் என்று நம் நண்பர் கருதுவதுபோல் எழுத்தாளர்க ளெல்லோரும் கருதி யிருப்பின்—விபசாரக் கதைகளும்-பொய் சொல்லிக் குபேரனுகுபவ னின் கதைகளுமே நம்முன் குவிந்து கிடக்கும் என்பதில் சந்தே கமேயில்லை.

"வறுமையும் அறிவின்மையும் சேர்ந்து மனித உள்ளத்தின் பண்பை மாற்றிப் பாவக் குழியில் விழச் செய்கின்றன. ஆகவே, மனிதரிடத்திலுள்ள அறிவின்மை, வறுமை முதலியவற்றை நீக்குவதற்கு நாம் வழி தேடவேண்டும்; அப்போதுதான் நாம் தூய வாழ்வு நடத்த முடியும் என்பதுதான் என் அபிப்பிராயம்" என்று நண்பர் குழந்தைசாமி கூறுகின்றார். இதிலிருந்து வறுமையின் கொடுமையினாலே அவ்வாறு கணேசனின் தாயார் கற்பிழக்க வேண்டி வந்தது என்றுதான் அவர் அபிப்பிராயப் படுகிறார். அவரே, "அவள் அத்தகைய தீச்செயலைச் செய்வதற்குக் காரண மாக இருந்தது அவளுடைய வறுமை" என்கிறார். வறுமையின் சிகரத்தைக்காட்ட இம்மாதிரி முடிக்கவேண்டிய அவசியமில்லை யென்று முன்னமேயே சொன்னேன்.

பண்ணையார் வீட்டிற்குப் பணம் வாங்கச் சென்ற காந்திமதி (அவள்தான் கணேசனின் தாயார்)—பண்ணையாரின் காமாந்தகார வெறிக்கு உட்பட மறுத்திருந்தால் அவன் அவளைப் பலவந்தப்படுத்தி அவளை அலங்கோலப் படுத்தி யிருக்கலாம். அப்போது அவள் உலகத்தை வெறுத்து தற்கொலைபண்ணி இறந்திருக்கலாம். அதனால் உதவியற்ற கணேசனும் உலகத்தின் இன்னல்களுக் கிடையே வருந்தி பயித்தியக்காரனாக மாறி உலகத்தை வெறுத்துத் திரியலாம். இவ்வாறு முடித்திருந்தால் வறுமையின் கொடுமையை இன்னும் அதிகமாக உணரலாம் என்று எண்ணுகிறேன். அல்லது தாயின் கதியை அறிந்த கணேசன் பண்ணையாளரைப் பழிக்குப் பழி வாங்கி யிருக்கவேண்டும்—அதனால் அவன் ஜன்மாந்திர ஜெயில் வாசம் செய்ய வேண்டும். இதுவும் வறுமையின் சிகரத்தையும், பணத்தின் திமிரையும் நன்கு வெளிப்படுத்தாதா? நண்பரின் சித்திரப்படி, கணேசனின் தாயார் **மனமறியக் கற்பிழந்து பணம் பெற்றாள்** என்றே பிரதிபலிக்கின்றது. இதைத்தானே எண்ணும்போது இருதயம் இருநூறு கூறாக முறிந்து உதிர்கின்றது!

"சீவகன் ஏழெட்டுப் பெண்களை மணந்தானே—தன் மனைவியல்லாதவளைப் புணர்ந்த ஆடவனைப் புகழவில்லையா?" என்றெல்லாம் என்னை வேறு வழியிலே இழுக்கின்றார் நண்பர் குழந்தைசாமி. அதை ஞாயமென்று நான் கூறவில்லையே! தமிழிலக்கியத்தில் இவை இருக்கின்றதே என்பதற்காக இவற்றை நான் புகழ முன் வரவில்லையே! "கணேசன் தாயாரு"க்கு ஏற்பட்ட சம்பவம் போன்றது இல்லை யென்றுதான் சொன்னேனே தவிர, வேறு தவறென்பதே தமிழிலக்கியத்தில் இல்லை யென்று பிடிவாதம் செய்ய வில்லை. எடுத்த விஷயத்தைப்பற்றி விவாதிக்கவே விரும்பினேன்.

ஆகவே, எந்த வகையிலும், இக் கதையின் முடிவு ஏற்றுக் கொள்ளப் படுவதற்கில்லை என்பதை நண்பரும் நேயர்களும் ஒத்துக் கொள்ளுவார்களென்றே நான் நம்புகிறேன். சிரமத்திற்கு மன்னிக்கவும்.

இறுதியாக, தமிழ் இலக்கியத்தி லிருப்பதாக இரு நிகழ்ச்சிகளை நண்பர் குறிப்பிட் டிருக்கின்றார். அவை எங்குள்ளதென்று சந்தர்ப்ப மறிந்துகொள்ள முடியவில்லை. துப்பறியும் நாவல்களில் இருப்பவை போன்று தோற்றுகின்றன. இதை "ஆனந்த போதினி" ஆசிரியரும் கீழே குறிப்பிட்டுக் கேட்டிருக்கின்றார். இதை நண்பர் கவனித்தால் எல்லோருக்கும் பிரயோஜன முண்டு என்று எண்ணுகின்றேன்.

---

**குறிப்பு:—"கணேசனின் தாயார்" கதை பற்றி, அன்பர் 'வீரசக்தி' அவர்களே யன்றி, மற்றும் பல நண்பர்களும் தங்கள் அபிப்பிராயங்களைத் தெரிவித் திருக்கின்றனர். அவற்றில் இன்றியமையாத இரண்டொன்றை அடுத்த இதழில் வெளியிடக் கருதி யிருக்கிறோம். —ஆசிரியர்.**

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## (சி. பி. ஆனந்தம்.)



### 17 சனி உலகமும்—பல பாகமும்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

தமக்கு வேண்டிய ஆப்த நண்பருடைய வரவைப் பற்றி மிகவும் ஆவலாக விருக்கிருர் ஒருவர். அந்த நிலையில் அவ் ஆப்த நண்பருடைய சந்திப்பு நேர்ந்தால், அது எவ்வளவு திருப்திக் குரிய நற்பலனை விருக்கும்! ஆம், இது பொது. ஆனால், அந்தச் சந்திப்பு நேர்ந்த சந்தர்ப்பம் மிகவும் விபரீதமான தாக விருப்பின், அவருடைய நிலைமை எப்படி இருக்கும்? சற்று ஊகித்துப் பாருங்கள். நண்பரைச் சரியாக வரவேற்கவும் முடியாமல்—வரவேற்காம லிருக்கவும் கூடாமல் மிகவும் அவஸ்தையில் தான் இருப்பா ரல்லவா! இந்த நிலையில் நற்பலன் என்று கருதும் சந்திப்பு நல்லதா—கெட்டதா?

இன்னொருவர்—அவருக்குப் பிரிய மில்லாத ஒருவருடைய வரவைப் பற்றிய செய்தி கிடைக்கிறது. அந்தச் செய்தி கிடைத்த நிமிஷத்தி லிருந்து அவருடைய மனம் வேதனைப்படும். அந்த நிலையில் அவர் வரவேற்பில் கலந்து கொள்ள முடியுமா? முடியா தல்லவா! ஆம், அதற்காக அவர் அதைத் தவிர்த்துவிடலாமா? அதுவும் கூடாது. இவ்விதமாக நிர்ப்பந்தம் மிக்க அந்தச் சந்தர்ப்பத்தை எவ்விதம் சமாளிப்பது என்பது அவசரமாகவும் முடிவு செய்ய வேண்டியதாக அவர்முன் இருக்கிறது. இந்த சிந்தனையில் தான் எவரும் புகவேண்டியவராக விருப்பர். அதன் பலனுக் தெளிவு கிடைத்துத் தீரும். அப்படிக் கிடைக்கும் தெளிவின்படி ஒருவர் நடந்து அதற்குரிய பலனை அடைகிருர். அதற்குள் சோதனையின் தீர்வை கடுமையானதே. எத்துணை தான் பகைவ ராயினும், வரவேற்று உபசரிக்கவேண்டிய கடமை அவருடைய சிந்தனையின் முடிவாகக் கிடைக்கிறது. அந்த முடிவின்படி தமது கடமையை நிறைவேற்றப் பொறுமையை மேற் கொள்கிருர். அதன் பலனுக அவருடைய பெருமை உயருகின்றது. பொறுமையுடன் கடமையைக் கடமை பொருட்டு நிறைவேற்றியதிலுள்ள வெற்றி அவருக்கு அனந்தமான நன்மைகளுக்கு வித்திட்டுச் செல்வதைக் காணுகிருர். சோதனைக்குரிய சந்தர்ப்பங்கள் பலவும் தாங்க முடியாத துன்பங்களை வைத்திருந்த போதிலும் உலகியல் நலங்களுக்கும்—உணர்வு எல்லையின் தூய்மைகளுக்கும் செலுத்தும் தக்க அனுபவங்களைப் பதிவு செய்வன வென்னும் உண்மை எல்லோருடைய கவனத்திற்கும் வந்திருக்கும்.

இவ்விதம், பலன்களை உணர்வு எல்லையில் ஊடி, அதற் குரியனவற்றை நிகழ்த்தி, தூய்மை செய்வதுதான் சனிக் கிரகத்தின் இயலாகுமென பலபாக்ம் கண்டிருக்கிறது. பொதுவில், இந்தத் தூய்மையின் நேர்மை இக—பர சித்திகளின் மேன்மைகளுக் குரிய தாய் இறுதியில் மங்கலமாய் முடிப்பது சனிக்கிரகத்தின் பலனாகும். இது சாதாரணமாக பாபக் கிரகங்களின் பலனாகவிருந்தாலும், சனிக் கிரகத்தின் பலன், வாழ்க்கைப் பாதையில் நெறி நேர்மைகளை உணர்த்தி ஊக்கும் வகையில் பரிசுத்தம் வாய்ந்ததென்பதில் விசேஷங் கொண்டதென்னலாம். இவ் வழி உயரிய கொடை நலத்தில் இதற்கு நிகரானது எதுவுமில்லையென்று கானு கின்றனர்.

"நற்பலன் தருவதில் தாமதங் கொண்டது; பெரும்பாலும் துக்கக்ரமான சோதனைகள் நிறைந்தது அதன் பலன்கள்" என்றே யாரும் கருதுவார்கள். ஆனால், அந்தத் தாமதமும்—சோதனைகளும் சுப பலன்களையே குறியாக்கியவையாதலால், சனிக் கோளின் இயல்பினை அறிஞர்கள் பெரிதும் வரவேற்கிறார்கள். அத்துடன் வாழ்க்கைப் பாதையில் உணர்வுக்கு உணர் வாய் நின்று உதவும் நற்றுணையேயாக அதன் பலனை மதிக்கிறார்கள்.

**அன்னி பெஸன்ட் அம்மையாருக்கு** இருபத்து எட்டாவது வயதில் சனி மகாதிசை தொடங்கிற்று. அதுவேளை சனிக்கிரகத்தின் இரண்டாவது சுற்று (பகணம்) ஆரம்பித்து விடுகிறது. இந்த இரண்டாவது சுற்றின் முதலிலுள்ள ஏழரை ஆண்டு, '**ஏழரை நாட்டான்**' என்று வழங்கப்படுகிறதே அந்தப் பொழுதாகும். சனி மகாதிசையும்—ஏழரைச் சனியும் அம்மையாருடைய வாழ்க்கைப் பாதையில் நிகழ்த்திய சோதனைகள் மிக அதிகம். ஆனால், அந்தச் சோதனைகள் ஒவ்வொன்றும் எதிர் காலத்தின் சிறப்புகளுக்கு அடிகோலுவனவாக விருந்தன. இச்சை—லக்ஷியம்—வாழ்வின் பங்காளி அல்லது துணை என்னும் பலன்களுக் குரிய ஏழாம் பாவத்திற்கும், விதி என்னும் எட்டாம் பாவத்திற்கும் அதிகாரம் கொண்டதாக அந்தச் சனி இருந்தது. துணிவு—தைரியம் என்னும் மூன்றில் இதயம்—ராஜ்யம் என்னும் ஐந்தாம்—பத்தாம் பாவாதிபன் அங்காரகனுடன் சேர்க்கை பலத்து வாய்ந்த சனி, தனது மகாதிசையின் ஆரம்பத்திலேயே—இரண்டாவது பகணத்தின் தொட்டக்கத்திலேயே தனக்குரிய அதிகாரங்களில் மிக்வும் துணிவாய்ப் பலவற்றை நிகழ்த்திற்று. அவையெல்லாம் பெல்ஜிய தேசத்து அந்த அம்மையை நாமெல்லாம் அன்னையென்று கொள்ளும்படி உயர உதவின. "தியாஸாபிக்கல்" சங்கத்தின் தலைவியாக உயர்ந்து நெடும் பொழுது அவர் நமது தேசத்தில் இருந்தமை நேயர்கள் அறிவார்கள்.

---

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")



(சென்ற இதழின் தொடர்ச்சி)

அக் கட்டிடம் "ட"வைப்போல் அமைந்திருக்கிறது. "ட"விலுள்ள இரு நேர்கோடுகளும் ஒன்றுய்ச் சேருமிடமான மூலேயில் தான் பெரிய வாயில் இருக்கிறது. பார்வையாளர் வாயில் வழியே உள்ளே சென்றதும் ஓர் சதுரமான கூடமிருக்கக் காண்பர். அக் கூடத்தில் அமர்வதற்கு இருக்கைகளும், கூடத்தின் சுவர்களில் கலேத்திறன் வாய்ந்த தென்னுட்டுக் கோயில்களின் புகைப் படங்களும் மாட்டப்பட்டுள்ளன. மேற்படி மாளிகையிலுள்ள இரு பிரிவுகளில் மேற்கேயுள்ளதில், மகன்வாடியில் கற்பிக்கும் எல்லாத் தொழில்கள் சம்பந்தமான பொருள்கள் வைக்கப்பட்டுள்ளன. உதாரணமாகப் பலவிதமான தேனீக்கள், அவைகள் வாழும் மரங்கள், இடங்கள், அவைகளுக்கான "பகைவர்கள்" ஆகிய வெல்லாம் படங்களாக வரைந்து வைக்கப்பட்டுள்ளன. விதவிதமான தேன் கூடுகளும், மற்றும் உபகருவிகளும் வரிசை வரிசையாய் வைக்கப்பட்டுள்ளன. இன்னெரு வரிசையில் சவுக்காரத்திற்கான மூலப் பொருள்கள், சவுக்காரங்கள் ஆகியவை வைக்கப்பட்டுள்ளன. வெல்லம், வெல்லத்திற்கான மூலப் பொருள்கள், மூலப் பொருள் உண்டாக்கும் தென்னே, பனே, ஈந்து ஆகியவற்றின் படங்கள், சார் இறக்குவதற்கென்று பல்வேறு மாகாணங்களில் கையாளப்படும் பற்பலவிதமான உபகருவிகள், வாணல்கள், அடுப்புகள் ஆகியவற்றின் (models) மாடல்கள் வைத்துள்ளன. மகன்வாடியில் தயாரான வெல்லம், சர்க்கரை, கற்கண்டு ஆகியவையும் வைத்துள்ளன.

காகிதம் செய்வதற்கான மூலப் பொருள்கள், செய்வதற்கான உருப்படிகள், செய்யும் முறைகள் ஆகியவையும் உள்ளன. மற்றும் எண்ணெய் வித்துக்கள், செக்குகளின் (models) உருவங்கள் அவற்றைத் தயாரிக்க உதவும் கருவிகள் ஆகியவும் வரிசை வரிசையாயும் ஒழுங்காயும் அமைத்துள்ளன.

காட்சி சாலேயின் மற்றெரு பகுதியில் கதர் சம்பந்தமான எல்லாக் கருவிகளும், மூலப்பொருள்களும் உள. உதாரணமாகப் பல்வேறு மாகாணங்களில் விளேயும், பல்வேறு பருத்தி இனுசுகள், பருத்தி விதைகள், பட்டுப்பூச்சிக் கூடுகள், காஷ்மீர தேசத்து ஆட்டுரோமங்கள் ஆகியவையும் உள. பருத்தி, பட்டு, கம்பளி நூல்கள், தரிகள், தரிகளின் (models) மாடல்கள், தயாரான பருத்தி, பட்டு, கம்பளி நூல்கள், நெய்து தயாரான பருத்தி, பட்டு, கம்பளித் துணிகள், ஜமுக்காளம், கட்டிலுக்காகும் நாடாக்கள், தேங்காய்நார், நார்ப்புரிகள், இவைகளால் செய்யப்படும்

துடைப்பான்கள் (Brush), தயாரான கதிர் பாய்கள், ஆகியவும் வைக்கப்பட்டுள்ளன.



பல்வேறு மார்காணங்களில் நடைமுறையிலிருந்த கைமிழ் ராட்டைகளும் வைக்கப்பட்டுள்ளன. அதில் ஒரு ராட்டை வங்காளத்தைச் சேர்ந்தது. அது சுமார் 180 ஆண்டுகட்கு முன் அங்கு நடைமுறையில் இருந்து வந்ததாய்ச் சொல்லப்படுகிறது. 450 நம்பர் நூல் வரை தக்ளியில் நூற்று வைக்கப்பட்டுள்ளது. ஜாவாத் தீவில் வாழும் காட்டு மிராண்டிகள் இருபதாம் நூற்றாண்டிலும் உடையின்றிக் காட்டில் கிடைக்கும் மரப்பட்டைகளை யுடுத்தி வருகிறார்களாம். அவர்கள் உடுத்தும் மரவுரியும் ஒரு புறம் வைத்துளது. இவைகள் எல்லாவற்றோடு அடிகள் தமிழகத்தில் யாத்திரை செய்த நாட்களில் அவருக்குப் படித்தளித்த பனையோலைப்பத்திரம் ஒன்றும் உளது.

ஆக இத்தனை சாமான்களையும் அவ்வவற்றிற்கான தனித் தனிப்பகுதிகளில் நேர்மையாயும், அழகாயும் வைத்திருக்கும் காட்சி கண்கவர்க்காட்சியாகவே யுளது. மேலே விளக்கியபடி நமது நாட்டில் 450 ஆம் நம்பர் நூலைத் தயாரித்த இந்தியனின் தொழிற்றிறத்தைக் காணும்போது, இத்தகைய திறத்தைக் கண்டு பொறாமையால் மனம் வெதும்பிய அன்னியன் அத் தொழில் வல்லானின் கைப்பெருவிரலைத் துண்டித்த கொடுஞ் செயல் ஒவ்வொரு இந்தியனுடைய உள்ளத்திலும் நினைவு வருவதோடு, அப்படிச் செய்த கொடியோனைப் பழிவாங்க வேண்டுமென்னும் வீரமும் துள்ளு மல்லவா?

நாம் இதுவரை மகன்வாடியிலுள்ள குடிசைத்தொழில்களையும், அவை சம்பந்தமான பிறவற்றையும் ஆராய்ந்தோம். இனி, அத் தொழில்களைப் பழக பாரதநாட்டின் மூலை முடுக்குகளி லெல்லாம் இருந்து வந்து கூடும் தொண்டர்களைப்பற்றியும், மாணவர்களைப்பற்றியும் பார்ப்போம்.

## மாணவ விடுதியும் உணவும்

மகன்வாடிக்கு வரும் மாணவர்கட்கும் தொண்டர்கட்கும், உண்ண உணவிற்கும், தங்க விடுதிகட்கும் சிறந்த முறையில் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. வித்தியாலயக் கட்டடத்தின் முன் வாயில் புகுந்து தோட்டத்தையும் கடந்து உட் சென்றால், முன்னே ஒரு தாழ்வாரமும் தாழ்வாரத்திற்கு அடுத்தாற்போல் ஒரு பிரார்த்தனைக் கூடத்தின் இரு மருங்கிலும் ஒவ்வொரு முற்றமும், முற்றங்களைச் சுற்றிப் பல அறைகளும் இருப்பது காணும். பிரார்த்தனைக் கூடத்தின் கீழ்ப் பக்கத்திலுள்ள அறைகளில் மாணவர் தங்கவும், மேற்புறமுள்ள அறைகள் இரண்டில் ஒன்று சமையலுக்கும், மற்றொன்று உக்கிராணத்திற்குமாகும். இவற்றிற்குப் பக்கமாயுள்ள கூடம் மாணவர் உண்பதற்கும், எதிரிலுள்ள இரு அறைகளில் ஒன்றில் மருந்து வகைகளும், மற்றொன்றில் வித்தியாலய அதிபர் (Warden) காரியாலய

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றப்-சு. மீ. கணபதி)



## நாலாவது அதிகாரம்

### கடமையா? மணமா?

பொய்யான நம்பிக்கை சிறிது ஏற்படினும் பெருந் துன்பங்களில் ஆழ்த்தி விடுகிறது. அதற்காக நம்பிக்கையே கொள்ளுதல் கூடாதா? நம்பிக்கை கொள்ளு முன்பு அதனை எப்படி பொய்யானது எனக் கண்டுகொள்ள முடிகிறது. சமய சந்தர்ப்பங்களை அனுசரித்துத்தான் கொள்ள முடியும். நம்பிக்கையே கொள்ளாமலிருந்து விட முடியுமா எனில் முடியாது. நம்பிக்கை யின்றேல் நிம்மதியாக காலங் கழித்தல் அசாத்யம். மனித வாழ்வுக்கு இன்றியமையாதது எனச் சொல்லலாம். நம்பிக்கையினால் நஷ்டமும் கஷ்டமும் ஏற்படுவதும்,லாபமும், நன்மையும் அடைவதும் உண்டு. சுந்திரா கொண்ட நம்பிக்கை அவள் மனதில் துயரை எழுப்பிவிட்டது. தான் உள்ளூரக் காதலித்து அன்பு செலுத்திவந்த வாசுவை தான் மணந்துகொள்ள முடியுமெனவே நம்பி யிருந்தாள். வாசுவிட மிருந்து காதலின் சாயையை எதிர்பார்த்தாள். ஆனால் ஒன்றும் அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. எப்பொழுதும் போலவே அன்புடன் சுந்திராவிடம் நடந்து வந்தான். அவன் காண்பித்து வந்த அன்பை அவளால் நிர்ணயிக்க முடியவில்லை. எவ்வளவு காலந்தான் தன் உள்ளக்கிளர்ச்சியை அடக்கி வைக்க முடியும்? அது தலை காட்டிற்று. அதன் பலன்தான் அன்றைக்கு கடற்கரை சம்பாஷணையின் உயிர். தனக்கு அவன் காதல் கிடைக்காது என சிறிது அவநம்பிக்கை கொண்டாள். ஆயினும் முயற்சி பலன் தராது போகாது என்னும் எண்ணமும் தன் சகோதரன் வார்த்தைக்கு எதிர்பேச மாட்டான் எனவும் கருதி யிருந்தாள். சமயம் பார்த்து தன் தமையனிடம் கூறக் கருதினாள். எவ்விதம் கூறுவது என வகையறியாது திகைத்தாள். வெட்கம் குறுக்கிடுகின்றது. தாயிடமும், அண்ணியிடமும் கூட சொல்வதற்கு வகை தெரியவில்லை. இதுவே சிந்தனைதான் அவளுக்குப் பல நாட்களாக தன்னால் முடியாத காரியத்திற்கு ஈஸ்வரனைத் துணை கேட்டாள்.

---

மும் உள. பிரார்த்தனைக் கூடத்தின் பின்புறத்தில் ஓர் பெரிய முற்றமும், அதைச் சுற்றிப் பத்து அறைகளும் உள. ஆக எல்லா அறைகளிலுமாய் அறை யொன்றுக்கு மூவராக எழுபது மாணவர்கள் வதியலாம். நான் போயிருந்தபோது சுமார் 65 பேர் வித்தியாலய விடுதிகளில் இருந்து வந்தனர். ஒவ்வொருவருக்கும், ஒரு பெட்டி, படுக்கை, உண்பதற்குத் தட்டு, ஒரு இரட்டை, இரண்டு அல்லது மூன்று தக்ஙி, ஒரு சில புத்தகங்கள் ஆகிய இவ்வளவுதாம் சொத்துக்கள். (தொடரும்)

சுவர்ணத்தின் வருகை இவளுக்கு அச்சம் தந்தது. அவளிடமிருந்து அறிந்து கொண்டதிலிருந்து வாசு அவளை மணந்து கொள்வான் எனவே நம்பினாள். அவளை உண்மையில் வாசு விரும்பினும் விரும்பாவிடினும், அவனுடைய கடமை அவனை மணந்துகொள்ளத் தூண்டும். தகப்பனருக்காக அவன் எதையும் செய்யத் துணிவான். ஆனால் அவன் தகப்பனருக்கு வேண்டிய பணிவிடைகளை நான் கவனித்துக்கொள்ள மாட்டேனா? இதை எப்படித் தெரியப்படுத்துவது? நானே நேரில் சொன்னால் என்ன நினைத்துக் கொள்வான்—துணிந்து சொல்லவும் மனம் வராது. இப்படியே மௌனமாக இருந்தால் காரியம் கெட்டுப்போனால்......எப்படியும் இன்று அண்ணாவிடம் கூறலாம். அவர் என்ன சொல்வாரோ? ஒருகால் கோபம் கொண்டால்......பார்க்கலாம். எப்படி யாயினும் ஆகட்டும் எனத் தீர்மானித்து சோமு தனிமையி லிருந்தபொழுது அவனை "அண்ணா, பீச்சுக்குப் போகலாம் வருகிறீர்களா" என்றாள். "வாசு ஏதாவது வேண்டுமென்று தேடிக்கொண்டு வந்தால் என்ன செய்கிறது. அவனுடன் இரண்டு பேர்கள் இருக்கிறார்களே. நீ மாத்திரம் வேண்டுமானால் போய் வா" என்றான். "நீங்களும் வந்தால் போகலாமென்று பார்த்தேன். இன்னொரு நாள் போனால் போகிறது" என்று சுந்திரா கூறி உட் சென்றாள். அவள் மனதில் மிகுந்த வியாகூலம் உண்டாகி விட்டது. அழுகை வரும் போன்று மிருந்தது. தனிமையாக மற்றொரு அறையில் சென்று படுத்துக் கொண்டாள். காரணமின்றி அவள் மனம் துயரப்பட்டுக்கொண்டே யிருந்தது. கண்களில் கண்ணீரும் வெளிப்பட ஆரம்பித்தது. சமாளிக்க முயன்றும் முடியவில்லை.

ஏதோ வேலையாக அவ்விடம் வந்த சோமு இவளுடைய நிலைமையைக் கண்டு துணுக்குற்றான். வெளியில் அழைத்துச் செல்ல மறுத்ததற்காக இது மாதிரி இருக்கமாட்டாள். காரணம் அறியவேண்டும் என நினைத்து சுந்திராவின் பக்கம் சென்று அமர்ந்தான். இவன் வந்ததை அவள் அறியவில்லை. சோமு கூப்பிட்ட பின்பு கண்ணீரைத் துடைத்துக் கொண்டு நிமிர்ந்து பார்த்தாள்.

"ஏன் அழுகிறாய்? உனக்கு என்ன வருத்தம்? யாராவது உன்னை ஏதாவது சொன்னார்களா? என்னிடம் எதுவாயிருப்பினும் கூறவேண்டாமா?" என்றான்.

இந்த அன்பு கலந்த சொற்கள் அவளுடைய கண்ணீரை அதிகப்படுத்தவே உதவி செய்தது. "ஒன்றுமில்லை. வாசு தகப்பனருக்காக மிகுந்த கஷ்டப்படுகிறாரே நம்மால் உதவி செய்ய முடியும்போது அவர் ஏன் துன்பப்படுகிறார் எனத் தெரியவில்லை. என் பொறுப்பில் விட்டால் நானே பார்த்துக் கொள்வேன். வாசு நம்மை தம்முடைய நண்பர்களாகக் கருதவில்லை என்பது தெரிகிறது. அதை நினைத்தால் என்னவோபோலிருக்கிறது" என்றாள்.

சோமுவுக்கு அவள் கருத்து புலப்பட்டது. இதற்கு வேண்டிய முயற்சிகள் செய்ய காலம் வந்துவிட்டது; இனி நாம் அசிரத்தையாக இருந்தால் காரியம் கெட்டுவிடலாம் என நினைத்து, "உன் இஷ்டப்படியே அவனிடம் சொல்கிறேன். ஒத்துக்கொண்டால் எனக்கும் சம்மதம். இதை வெளியே சொல்லாமல் அழுதுகொண்டிருந்தது புத்திசாலித்தனமாகாது" என்று கூறி வெளியே சென்றான். சுந்திராவுக்கும் சிறிது நம்பிக்கை உண்டாயிற்று. ஆயினும், வாசுவின் சொற்களும், ஸ்வர்ணத்தின் நினைவும் அவளை வருத்திக் கொண்டுதா னிருந்தன.

வாசு இரவு ஆகாரத்திற்காக தனக்கும் ஸ்வர்ணத்திற்கும் ஹோட்டலிலிருந்து சாப்பாடு தருவித்தான். பத்மாசனிக்கு அவள் வேண்டியபடி பழ

வகைகள் வாங்கிக்கொடுத்தான். இது முடிந்த பின்பு மெதுவாக தன் சமா சாரத்தை ஆரம்பித்தான். "நான் எப்பொழுது அப்பாவை அழைத்து வருவது? வீடு எவ்வளவு இருத்தல் வேண்டும்? தனி வீடாகவே பார்க்கலாமா அல்லது ஒண்டிக் குடித்தனம் இருக்க சௌகரியமா" எனக் கேட்டான்.

"அதற்கு இப்பொழுது அவசரமென்ன? காலையில் பார்த்துக்கொள்ளலாம். நம்ம சுவர்ணத்திற்கு வயது பதினைந்து நடந்துகொண்டிருக்கிறது. எட்டாவதுவரை படிக்கவைத்தேன். அதற்குமேல் என்னால் படிக்கவைக்க சக்தியில்லை. நன்றாகப் பாடுவாள். குடும்பப் பாங்கு தெரிந்த பெண். இவளை நல்ல இடத்தில் விவாகம் செய்து கொடுத்துவிட்டால் எனக்கு வேறு கவலையே இருக்காது. அதற்காக மனுஷ்யப் பிரயத்தனம் எவ்வளவோ அவ்வளவும் செய்யத் தயாராயிருக்கிறேன்" என்றான்.

"அதற்குக் காலம் வரவேண்டாமா? சுவர்ணம் அழகாக இருக்கிறாள். நல்ல புத்திசாலி எனவும் எனக்குப் பட்டது. அவளுக்கு வரன் தேடுவது அவ்வளவு சிரமமான காரியமென நான் நினைக்கவில்லை. உனக்கு அவளைப் பற்றிய கவலை வேண்டாம்; நான் ஏற்பாடு செய்கிறேன்" என்றான் சோமு.

"அதுதானப்பா, நான் வேண்டுவதெல்லாம். என் கையில் ஆயிரத்து முன்னூறு ரூபாய் இருக்கிறது. அவளுக்கு ஒன்றிரண்டு நகைகளும் போட்டிருக்கிறேன். நான் முன்னே ஒரு கடிதம் எழுதினேனே அது உனக்கு வந்து சேரவில்லையா?"

"ஒரு கடிதம்தான் எழுதியிருந்தாய். அதற்கும் நான் உடனே பதில் எழுதினேன். நீதான் அதன் பின்பு ஒன்றும் எழுதவில்லை" என்று மனமறிந்து சமயத்தை அனுசரித்து பொய் சொன்னான். "ஆனால் நான் இரண்டு கடிதங்கள் எழுதினேன். மற்றொன்று உனக்கு வந்து சேரவில்லையா? உன்மேல் அதற்காக நான் வருத்தப்பட்டேன். இப்படியா சமாசாரம்? பார்த்தியா ஸ்வர்ணம்! நாம் போட்ட இரண்டாவது கடிதம் வந்து சேரவில்லையாம்" என்றாள் தன் பெண்ணைப் பார்த்து. ஸ்வர்ணம் பலருடனும் பேசிப் பழகியவளல்ல. அதுவும் வந்த இடத்தில்—தனக்கு மணாளனாகப் போகும் ஒருவன் முன்பு பேசுவதற்கே வெட்கப்பட்டு பேசாம லிருந்தாள்.

"அதைப்பற்றி என்னத்திற்கு இப்பொழுது? நீதான் இங்கேயே இருக்கிறாய். உடம்பு ஒரு மாதிரியாய் இருக்கிறது. சிறிது ஓய்வெடுத்துக் கொள்ளுதல் நல்லதென நினைக்கிறேன். நீங்களும் அலுப்புத்தீர படுத்து உறங்குங்கள். காலையில் பேசிக் கொள்ளலாம்" என்றான் வாசு, சம்பாஷணையின் போக்கை அறிந்து அதனை மாற்றுவதற்காக.

பத்மாசனி, "உனக்கு என்ன உடம்பு? டாக்டரிடம் காண்பிப்பது தானே. ஹோட்டல் உணவு ஒத்துக் கொள்வது சிரமந்தான். இதை உத்தேசித்துத்தான் நானும் அங்கிருந்து வந்தது. சுவர்ணத்தைக் கல்யாணம் செய்து கொள். என்னால் முடிந்தவரை ஏதோ செய்கிறேன். சுவர்ணமும் நானும் உனக்கு ஒத்தாசையாக எல்லா வேலைகளையும் கவனித்துக் கொள்வோம். எனக்கு வெகு நாளாகவே இந்த எண்ணம் உண்டு. உன் தாயார் இருந்தால் நான் சொல்கிறபடியே செய்வாள். அதை இப்பொழுது நினைத்து என்ன பலன்? நான் சொல்கிறபடி கேள். உறவும் விட்டுப்போகாது. என் மனக்கவலையும் தீர்ந்து விடும். நிம்மதியாக என் கடைசி நாட்களைக் கழிப்பேன்" என்றாள்.

(தொடரும்)

## சுபானு ௵ ஆனி௴ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 17 | 29 | 38 | 59 | 53 | 196 | 57 | 350 | 45 | 37 | 46 | 93 | 45 | 104 | 56 | 54 | 02 | 115 | 51 |
| 2 | 17 | 33 | 34 | 60 | 54 | 210 | 44 | 351 | 28 | 38 | 29 | 93 | 58 | 105 | 58 | 54 | 09 | 115 | 48 |
| 3 | 17 | 37 | 31 | 61 | 50 | 225 | 19 | 352 | 12 | 39 | 21 | 94 | 10 | 107 | 00 | 54 | 17 | 115 | 45 |
| 4 | 17 | 41 | 27 | 62 | 47 | 239 | 55 | 352 | 55 | 40 | 12 | 94 | 22 | 108 | 01 | 54 | 25 | 115 | 42 |
| 5 | 17 | 45 | 24 | 63 | 43 | 254 | 53 | 353 | 39 | 41 | 11 | 94 | 34 | 109 | 02 | 54 | 33 | 115 | 38 |
| 6 | 17 | 49 | 20 | 64 | 40 | 269 | 52 | 354 | 22 | 42 | 10 | 94 | 47 | 110 | 03 | 54 | 40 | 115 | 35 |
| 7 | 17 | 53 | 17 | 65 | 37 | 284 | 35 | 355 | 05 | 43 | 17 | 94 | 59 | 111 | 03 | 54 | 48 | 115 | 31 |
| 8 | 17 | 57 | 13 | 66 | 34 | 299 | 18 | 355 | 48 | 44 | 24 | 95 | 12 | 112 | 03 | 54 | 56 | 115 | 28 |
| 9 | 18 | 01 | 10 | 67 | 30 | 314 | 37 | 356 | 31 | 45 | 37 | 95 | 24 | 113 | 03 | 55 | 04 | 115 | 25 |
| 10 | 18 | 05 | 06 | 68 | 27 | 329 | 57 | 357 | 14 | 46 | 51 | 95 | 37 | 114 | 02 | 55 | 11 | 115 | 22 |
| 11 | 18 | 09 | 03 | 69 | 24 | 342 | 32 | 357 | 57 | 48 | 12 | 95 | 49 | 115 | 00 | 55 | 19 | 115 | 19 |
| 12 | 18 | 13 | 00 | 70 | 21 | 355 | 06 | 358 | 39 | 49 | 33 | 96 | 02 | 115 | 58 | 55 | 26 | 115 | 16 |
| 13 | 18 | 16 | 57 | 71 | 18 | 8 | 06 | 359 | 22 | 51 | 00 | 96 | 14 | 116 | 56 | 55 | 34 | 115 | 12 |
| 14 | 18 | 20 | 53 | 72 | 15 | 21 | 05 | 0 | 04 | 52 | 28 | 96 | 27 | 117 | 55 | 55 | 41 | 115 | 09 |
| 15 | 18 | 24 | 49 | 73 | 12 | 33 | 37 | 0 | 47 | 54 | 02 | 96 | 39 | 118 | 51 | 55 | 49 | 115 | 06 |
| 16 | 18 | 28 | 46 | 74 | 09 | 46 | 08 | 1 | 29 | 55 | 37 | 96 | 52 | 119 | 48 | 55 | 56 | 115 | 03 |
| 17 | 18 | 32 | 43 | 75 | 05 | 58 | 18 | 2 | 12 | 57 | 18 | 97 | 05 | 120 | 44 | 56 | 04 | 115 | 00 |
| 18 | 18 | 36 | 39 | 76 | 02 | 70 | 28 | 2 | 54 | 58 | 59 | 97 | 18 | 121 | 41 | 56 | 11 | 114 | 57 |
| 19 | 18 | 40 | 36 | 76 | 58 | 82 | 23 | 3 | 36 | 60 | 46 | 97 | 31 | 122 | 36 | 56 | 19 | 114 | 53 |
| 20 | 18 | 44 | 32 | 77 | 55 | 94 | 17 | 4 | 18 | 62 | 34 | 97 | 44 | 123 | 31 | 56 | 26 | 114 | 50 |
| 21 | 18 | 48 | 29 | 78 | 52 | 106 | 04 | 5 | 00 | 64 | 27 | 97 | 57 | 124 | 25 | 56 | 34 | 114 | 47 |
| 22 | 18 | 52 | 26 | 79 | 49 | 117 | 51 | 5 | 42 | 66 | 20 | 98 | 10 | 125 | 18 | 56 | 41 | 114 | 44 |
| 23 | 18 | 56 | 23 | 80 | 46 | 129 | 42 | 6 | 24 | 68 | 18 | 98 | 23 | 126 | 11 | 56 | 49 | 114 | 41 |
| 24 | 19 | 00 | 19 | 81 | 43 | 141 | 33 | 7 | 05 | 70 | 16 | 98 | 36 | 127 | 04 | 56 | 56 | 114 | 38 |
| 25 | 19 | 04 | 16 | 82 | 40 | 153 | 45 | 7 | 47 | 72 | 18 | 98 | 49 | 127 | 56 | 57 | 04 | 114 | 34 |
| 26 | 19 | 08 | 12 | 83 | 37 | 165 | 57 | 8 | 28 | 74 | 21 | 99 | 02 | 128 | 47 | 57 | 11 | 114 | 31 |
| 27 | 19 | 12 | 09 | 84 | 33 | 178 | 48 | 9 | 10 | 76 | 26 | 99 | 15 | 129 | 38 | 57 | 18 | 114 | 28 |
| 28 | 19 | 16 | 05 | 85 | 30 | 191 | 38 | 9 | 51 | 78 | 32 | 99 | 28 | 130 | 28 | 57 | 25 | 114 | 25 |
| 29 | 19 | 20 | 02 | 86 | 27 | 205 | 21 | 10 | 32 | 80 | 40 | 99 | 41 | 131 | 17 | 57 | 33 | 114 | 22 |
| 30 | 19 | 23 | 58 | 87 | 24 | 219 | 04 | 11 | 13 | 82 | 48 | 99 | 54 | 132 | 05 | 57 | 39 | 114 | 19 |
| 31 | 19 | 27 | 55 | 88 | 21 | 233 | 39 | 11 | 54 | 84 | 57 | 100 | 07 | 132 | 53 | 57 | 46 | 114 | 15 |
| 32 | 19 | 31 | 51 | 89 | 19 | 248 | 14 | 12 | 35 | 87 | 06 | 100 | 20 | 133 | 40 | 57 | 53 | 114 | 12 |

**ஆகாயக் காட்சி:**—23௳ முன் இரவு மணி 7-40க்கு தெற்கே பாகை 0-27ல் **சுக்ர-சந்திர சமாகமம்.** 30௳ குரு பஸ்சாத் (மேற்கில்) **அஸ்தமனம்.**

**பிரவேஸங்கள்:**—13௳ காலை மணி 9-17க்கு **அங்காரகன் மீன** மிருந்து **மேஷ**த்திற்கும், 18௳ மாலை (முன் இரவு) மணி 8-41க்கு **புதன் விருஷப** மிருந்து **மிதுன**த்திற்கும், 16௳ காலை மணி 12-09க்கு **சுக்ரன் கடக** மிருந்து **சிம்ம**த்திற்கும் பிரவேஸிக்கின்றன.

* அயனும்சம் பா-22 கலை-56 விகலை 07·3774 கூட்ட **சாயன ஸ்புடம்** வரும்.

† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட **கேது ஸ்புடம்** வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சுபானுஞு ஆனிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜிரா 1362

இங்கிலீஷ் 1943ஞு ஜூன்மீ—1943ஞு ஜூலைமீ

| ஆனிமீ | ஜூன்மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | செவ் | து23-27 | சு4-27 | சி4-27ம | ஷடசீதி புண்யகாலம் |
| 2 | 16 | புத | திர19-53 | வி3-35 | சித்60 | |
| 3 | 17 | வியா | சசி16-13 | அ1-47 கே58-23 | சி1-47மி | ரிஷப பூஜை, பௌர்ணமி விரதம் பூஜை |
| 4 | 18 | வெள் | ப◯11-24 | மூல55-47 | அ55-47மி | பௌச்ய மனு [ண தீர்த்தம் |
| 5 | 19 | சனி | பிர6-10 | பூ52-13 | சித்60 | ஜ்யேஷ்ட பருளடி, சத்ய பூர் |
| 6 | 20 | ஞா | துதி0-09 திரு54-07 | உத்48-07 | அமி60 | ரகுவாரிய தீர்த்தம்\| |
| 7 | 21 | திங் | சது47-23 | திரு43-47 | அ43-47சி | |
| 8 | 22 | செவ் | பஞ்41-29 | அவி39-35 | சி39-35ம | |
| 9 | 23 | புத | சஷ்35-24 | சத36-07 | சி36-07அ | |
| 10 | 24 | வியா | சப்30-03 | பூர33-13 | சித்60 | |
| 11 | 25 | வெள் | அ26-19 | உட்31-11 | சித்60 | |
| 12 | 26 | சனி | நவ22-47 | ரே29-23 | மி29-23சி | |
| 13 | 27 | ஞா | தச19-50 | அசு28-50 | சி28-50மி | |
| 14 | 28 | திங் | ஏ18-36 | பர29-27 | சி29-27ம | |
| 15 | 29 | செவ் | து19-13 | கி✲31-13 | சி31-13அ | **கிருத்திகை விரதம்** |
| 16 | 30 | புத | திர20-23 | ரோ34-10 | சித்60 | மாச சிவராத்திரி |
| 17 | 1 | வியா | சசி22-47 | மிரு39-35 | மர60 | சத்தியாமி நவ தீர்த்தம் |
| 18 | 2 | வெள் | ●26-22 | திரு44-25 | சித்60 | **அமாவாஸ்யை விரதம்** |
| 19 | 3 | சனி | பிர30-35 | புன50-23 | மர60 | ஆஷாட சுத்தம் |
| 20 | 4 | ஞா | துதி35-21 | பூச57-07 | சித்60 | ரத யாத்ர த்வதீயா-ராம ர |
| 21 | 5 | திங் | திரு40-49 | ஆ60-00 | சித்60 | திருதினஸ்பிருக் [தோற்சவம் |
| 22 | 6 | செவ் | சது45-35 | ஆயி3-37 | சித்60 | மாணிக்க வாசக சுவாமிகள் திருநக்ஷத்திரம் |
| 23 | 7 | புத | பஞ்49-13 | மக9-35 | சி9-35அ | ஸ்கந்த பஞ்சமி |
| 24 | 8 | வியா | சஷ்52-10 | பூர15-10 | சி15-10ம | குமார சஷ்டி [திருமஞ்சனம் |
| 25 | 9 | வெள் | சப்53-55 | உத்19-13 | சி19-13அ | விவஸ்வத் சப்தமி, ஆனித் |
| 26 | 10 | சனி | அ54-37 | அ21-38 | மர60 | சுபங்கள் விலக்க |
| 27 | 11 | ஞா | நவ53-49 | சித்23-23 | சித்60 | மந்திராப்பியாஸம் செய்ய |
| 28 | 12 | திங் | தச52-09 | சு24-37 | அ24-37ம | லக்ஷ்மி-சாகவிரதாரம்பம் |
| 29 | 13 | செவ் | ஏ49-12 | வி23-02 | ம23-02சி | விஷ்ணு சயன ஏகாதசி |
| 30 | 14 | புத | துவ44-57 | அ21-40 | சித்60 | கோபத்ம விரதம் |
| 31 | 15 | வியா | திர40-13 | கே19-12 | மி19-02சி | பிரதோஷம் |
| 32 | 16 | வெள் | சசி34-47 | மூல16-13 | அ16-13மி | பவித்ரோபவனம், பௌர்ணமி பூஜா |

1943ஞு ஜூலைமீ

| செ | | புதன் சனி | சூர் |
|---|---|---|---|
| | 13-மே-செ 16-சிம்-சுக் 18-மிது-புத | | கு-சு ராகு |
| கே | | | |
| | | | |

**Edited, Printed & Published by N. Munisawmy Mudaliar,**
**At The "Ananda Bodhini" Press,**
**No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.**

# பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதெது?




முறையாய் செய்த அயக்காந்த செந்தூரத்தைக்காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.

**விளம்பரம்.** **இதைக் கண்ணுறும் கனவான்களே!** இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

தற்சாலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவர்க்கு உண்டான 20-வகை ரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த ஏப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம், அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரை யில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்க முடியாத பாதையைத் தரும் தந்திமேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீக்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நரம்புகளுக்கும் முருக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கிப் பலத்தைத் தருவதில் இதற்கு மிஞ்சின லேகிய பஸ்பம் வேறெங்குமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்வோம். இதல்லாமல் தேகத்தை புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு, நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதிகளைக் கண்டித்து, தினந்தோறும் மலத்தைத் தாராளமாய்ப் போக்குவதில் இந்த லேகிய செந்தூரங்களே முதன்மையானவை யென்பதே யாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க,

இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபாரகுணம் தெரியவரும். தவிர, யாங்கள் இம் மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவர்கள் தாம் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை: யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும்: இது தவறாது. இவற்றைத் தருவித்து நீங்கள் எண்ணிக்கையாக 10-நாளைக்குச் சாப்பிட்டால் அவற்றின் குணம் உங்களுக்கு நன்றாய்த் தெரியும்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பண்டங்களையும் நீக்குதலின்றி மருந்து சாப்பிடும் காலத்தில் வயிற்றுக்குத் துரோகம் செய்யாமல் சாப்பிடலாம். இவற்றைச் சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும். ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு தயிர், பால், கறி, மார்கண்ட சூப்பு, நெய் இவைகளை அதிகமாய்ப் பசியைத் தணிக்கக் கூடிய விதமாகத் தாமதம செய்யாமல் சாப்பிட்டு வரவேண்டியது. இவற்றைப் புசிக்கும்போ தெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால், நெய், முதலியவைகள் எவைகளா யிருந்தாலும் சந்தேகமின்றிச் சாப்பிட்டு வரலாம்.

இந்தியா, ஸிலோன் ஆகிய உள்நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1—12—0. போஸ்டேஜ் அணா 7. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோருர்கு தபாற்கூலி உள்பட ரூ. **4.**

ஸிலோனில் உள்ளோர் முழு தொகையையும் முன் பணமாக மணி ஆர்டர் அனுப்பி பெற்றுக் கொள்ளவும். முன் பணமின்றி வி. பி. யில் அனுப்பபட மாட்டா.

---

**விலாசம்:—லேகியம் டிபோ,**

**44,** நம்புலியர் தெரு, மதராஸ்.

---

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டு வர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கி விடும்.

புட்டி 1-க்கு அணா. **4** வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும்பலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் கொடுக்கலாம். புட்டி 1-க்கு விலை ரூபா **1—8—0.**

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# நாராயண சஞ்சீவித் தைலம்

இத்தைலம் முழுவதும் பச்சிலைகளாலும், பசும்பால் முதலிய சிரேஷ்டமான வஸ்துக்களாலும் ஆயுர்வேத முறைப்படி மிகப் பரிசுத்தமாகத் தயார் செய்யப்பட்டது. இத்தைலத்தில் ஸ்நானம் செய்வதினால் தலைவலி, ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, மண்டைக்குத்தல், கண் எரிச்சல், கண்களில் நீர் வடிதல், சாலேஸ்வரம், காதுநோய், தலைபாரம், அதிக வெய்யிலினால் உண்டாகும் சிரரோகங்கள், சரீரதாபம், மூளைக்கொதிப்பு முதலியவைகள் ஆச்சரியப்படும் விதமாய்த்தீரும். தொடர்ச்சியாய்ச் செய்துவரும் இதன் ஸ்நானங்களினால் நரைத்த மயிர் கருத்துவிடும். மூளையைக் குளிரப்பண்ணி அறிவையும் திடச் சித்தத்தையும் உற்சாகத்தையும் உண்டு பண்ணுவதில் இது நிகரற்றது. சாராய சத்து முதலிய ஆங்கில வாசனைகள் இதில் சேர்க்கப்படவில்லை. சுத்தமான பச்சிலை, கிழங்கு புல் முதலிய இந்திய வாசனைகளே சேர்க்கப்பட்டிருக்கின்றன. தினம், இதனைத் தலையில் தடவி வாரி வருவதினால் மயிர் கருப்புப் பட்டைபோல் பளபளப்பாகக் கருத்து ஆலம் விழுதுபோல் நீண்டு வளரும். இன்னும் இது, உஷ்ணத்தைத் தணித்து ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் உண்டாக்கும். கஷ்டப்பட்டு வேலை செய்தவர்களும் வெகுதூரம் நடந்தவர்களும் படுக்கும்போது சிறிது தைலத்தை உள்ளங்கை உள்ளங்கால்களில் தேய்த்துக்கொண்டால் காலையில் எழுந்திருக்கும்போது திரேகம் ஆரோக்கியமாய் இருக்கும். 5 பலம் டின் 1-க்கு ரூபா 1. தபால் சார்ஜ் பிரத்தியேகம்.



# கூந்தல் வளரும் துளி



இதை நல்லெண்ணெய் அல்லது தேங்காய்யெண்ணெயில் கலந்து பிரதிதினம் மயிருக்குப் பூசிவந்தால் கூந்தலானது ஆலம் விழுதுபோல் உண்மையாய் வளரும். அதில் பேன் சேராது: சுண்டு உண்டாகாது; மயிர் உதிராது. வழுக்கை விழுந்த இடத்திலும் மயிர் முளைக்கும்.

புட்டி 1-க்கு அணா 12. தபாற்கூலி வேறு.

# சூதக நிவாரணி மாத்திரை



ஸ்திரீகளுக்கு மாதாந்திர பஹிஷ்டை (ருது) சிரமமாக வெளிப்படாமல் காலந் தவறி வெளிப்படுதல், சிலகாலம் வெளிப்படாமலேயிருத்தல், வயிற்றுவலி, ஜுரம், மார்பு நோய், மயக்கம், கழுத்திசிவு, ஜன்னி தோஷங்கள், மஞ்சட் காமாலை, உணர்ச்சியின்றி சிறுநீர் பெருக்கெடுத்தல், மூர்ச்சையாகுதல், மார்பு படபடவென்று அடித்துக்கொள்ளுதல், மேல்மூச்சு வாங்குதல், மர்மஸ்தானத்தில் பொறுக்கமுடியாத வேதனை உண்டாகுதல் இன்னும் மாதர்களுக்குக் காணும் ருது சம்பந்தமான எல்லா வியாதிகளையும் கண்டித்து கருப்பகோசத்தைச் சரிப்படுத்திச் சந்தான விருத்தியை உண்டாக்கும்.

ஒரு டப்பி மாத்திரை விலை ரூபா 1.

---

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| மூப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணாகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

[illegible]ன்னும் சர்வ தேவதா வசியம்

முதல் பாகமும் இரண்டாம் பாகமும் சேர்ந்தது. விலை ரூபா 1.

---

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.

**Edited, Printed and Published by N. MUNISAMI MUDALIAR, at the "ANANDA BODHINI PRESS" No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.**